குருபாதம்

# ஞானசம்பந்தம்

தருமையாதீனத் திங்கள் இதழ்

லர் 35 ] இராக்ஷச ஆண்டு கார்த்திகைத்திங்கள் 10—12—75 [ இதழ்



தருமையாதீனக்குருமுதல்வர்



ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்த சுவாமிகள்

உ

குருபாதம்

## ஸ்ரீ குருஞானசம்பந்தர் அருள்வாக்கு

உலக வெறுப்பும்
உடல்வெறுப்பும் உள்ளத்
திலகு மலவெறுப்பும்
எல்லாம் — அலகிறந்த
நந்தாத இன்பசுக
நாட்டின் விருப்பமுறத்
தந்தாள்வை சொக்கநா
தா.

– சொக்கநாத வெண்பா–11.

ஆசிரியர் :-
வித்துவான்
இராமலிங்கத் தம்பிரான்
சுவாமிகள்

துணையாசிரியர் :-
மகாவித்துவான்
சி. அருணைவடிவேல் முதலியார்

உ

குருபாதம்

# “ஞானசம்பந்தம்”

தருமையாதீனத் திங்கள் இதழ்

மலர் 35 | 10-12-75 | இதழ் 1

## உட்பொருள்

திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனம்



தம்திருப்பேர் தாங்கிவரத் தண்கருணை பாலித்த
நம்முடைய முதற்குரவர் குருஞான சம்பந்தர்.

குருபாதம்

# ஞானசம்பந்தம்

மலர் 35 | இராக்ஷச – கார்த்திகை – 10—12—75 | இதழ் 1

திருச்சிற்றம்பலம்

பொன்றயங் கிலங்கொளிர் நலங்குளிர்ந்த புன்சடை
பின்றயங்க ஆடுவாய்! பிஞ்ஞகா! பிறப்பிலீ!
கொன்றையம் முடியினாய்! கூடலால வாயிலாய்!
நின்றயங்கி யாடலே நினைப்பதே நியமமே. – சம்பந்தர்.

திருச்சிற்றம்பலம்

# வளர்ப்போம் - வளர்வோம்

அறிவுக்கொடை :

'ஞானசம்பந்தம்' தனது சிறப்புமிக்க முப்பத்து நான்கு ஆண்டுக்காலப்பணியில் நிறைவு பெற்று முப்பத்தைந்தாவது ஆண்டில் அடியெடுத்து வைக்கிறது. ஆரவாரமில்லாத ஆனால், ஆழமான தொண்டினால் வீறு பெற்று நிற்கும் ஞானசம்பந்தம் இதழின் தோற்ற வளர்ச்சி வரலாற்றினை மீண்டும் ஒருமுறை சிந்தித்து நினைவு கூர்கின்றோம். கடந்த முப்பத்து நான்கு ஆண்டுகளில் செந்தமிழ்க்கும் - சிவநெறிக்கும் ஒல்லும் வகை தொண்டாற்றிய ஞானசம்பந்தம் இதழ் தமிழகத்துக்கும் தமிழ் மக்களுக்கும் வழங்கிய அறிவுக் கொடை குறிக்கத்தக்க சிறப்புடையது.

தருமை ஆதீனம் :

முடியுடை மூவேந்தர்களாலும், குறுநில மன்னர்களாலும் போற்றி வளர்க்கப்பெற்ற செந்தமிழும் – சிவநெறியும் பதினாறும்

நூற்றுண்டில் மூவேந்தர் ஆட்சி முற்றுப்பெற்ற காலை, போற்றிப் புரப்பாரை வேண்டி நின்றன. அக்காலத்தில் முன்னும் பின்னு மாகத் தோற்றங்கொண்ட சைவாதீனங்கள் செந்தமிழைப் போற்றிச் சிவநெறிபுரக்கும் ஞானப்பண்ணைகளாக வேரூன் றின. கடந்த நானூருண்டு வரலாற்றில் சைவாதீனங்கள் இயற் றிய அருளறப்பணிகள் பெருமிதத்துக்குரியன. இவற்றுள், திருக் கயிலாய பரம்பரைத் தருமை ஆதீனத்தின் பெரும்பணிகள் தமிழகம் அறிந்த சிறப்புமிக்கன.

## அருளறப்பணிகள் :

கி. பி. 16 ஆம் நூற்றுண்டின் இறுதியில் தருமையாதீனத் தைத் தோற்றுவித்த அருளாளர் ஸ்ரீ குருஞானசம்பந்தர். பக்குவர்களுக்கு அருளுபதேசத்தால் ஞானம் வழங்கிய அவர்கள் செந்தமிழில் எட்டுச் சாத்திர தோத்திர நூல்களையும் அருளிச் செய்து தமிழுலகிற்கு வழங்கினூர்கள். அன்று அவர்கள் தொடங்கிய அருள்ஞானப்பணி இன்று வரை நாளும் நாளும் வளர்ந்து வந்திருப்பதை வரலாறு விளக்குகிறது. அவர் களுக்குப்பின்னர், ஞானபிடத்தமர்ந்த குருமகாசந்நிதானங்களும் தருமையாதீனத் திருக்கூட்டத்து அடியவர்களும், உபதேசத் தாலும், அருள்ஞானப்பனுவல்களாலும் தமிழகத்திலும், ஏனைப் பகுதிகளிலும் வாழும் மக்களின் அறியாமை களைந்து மனமாசு துடைத்தருளினர். செந்தமிழ்ப்புலவர்களை ஆதரித்தும், சாத்திர தோத்திர அறநூல்களை வெளியிட்டும், மாநாடுகள் கூட்டி நூல் விளக்கம் செய்வித்தும், திருக்கோயில் நலம் புரந்தும் தொண் டாற்றி வளர்ந்து வந்த தருமையாதீன வரலாற்றில், காலத்திற் கேற்ற பணிசெய்ய 'ஞானசம்பந்தம்' திங்கள் இதழ் இன்றைக்கு முப்பத்து நான்கு ஆண்டுகளுக்கு முன்னர் தோற்றுவிக்கப் பெற்றது.

## ஞானசம்பந்தம் தோற்றம் :

தருமையாதீன 24 வது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்கள் செந்தமிழ்க்கும் - சிவநெறிக்கும் தொண்டாற்ற 'ஞானசம்பந்தம்' திங்கள் இதழைத் தோற்றுவித்தருளினூர்கள். ஏழை மாணுக்கர் நலத்திற்குத் தொடக்கப்பள்ளி, சிவாகமக்கல்விக்கு 'வேத சிவாகம பாடசாலை', திருமுறைக் கல்விக்குத் 'தேவார பாட சாலை' முதலியனவற்றை முதன் முதல் தோற்றுவித்துப் புரந்த அவர்கள் அருள் நெஞ்சம், சம்பிரதாயங்களைக் கடந்து,

பல்லக்கை விட்டு உந்து ஊர்தியில் பயணஞ்செய்து, திருக்கோயில் மற்றும் ஆதீன வளர்ச்சியில் விரைந்து பணியாற்றத் துணிவு கொண்டதாகத் திகழ்ந்தது. தமிழகமெங்கும் வாழும் மக்கள் இல்லங்கள் கோறும் சென்று அவர்களுக்கு நன் ஞானம் வழங்கவேண்டும் என்ற அவர்கள் கருணை உள்ளம் ஞான சம்பந்தம் தோன்ற வழிகோலிற்று.

### இருவகை ஏடுகள் :

இன்று மக்கள் மத்தியில் உலவும் பத்திரிகைகளை இரண்டு வகையாகப் பாகுபாடு செய்யலாம். ஒன்று மக்கள் எண்ணங்களை அனுசரித்து, அவர்தம் ஆசாபாசங்களை ஒட்டிய செய்திகளையே வெளியிடும் பொருள் நோக்கம் கொண்டது. மற்றொன்று மக்களது உள்ள வளர்ச்சியைக் குறிக்கோளாகக் கொண்டு அவர்கள் நெஞ்சில் அறம் மலரக் கூறவேண்டுவனவற்றை வலியுறுத்தி அழுத்தந்திருத்தமாகக் கூறுவது. ஞானசம்பந்தம் இரண்டாம் வகையைச் சார்ந்தது. தீய விழைவுகளுக்குத் தூபமிடாது அவற்றை அகற்றி நெஞ்சில் நன்மைப்பயிர் வளர அன்பு நீர் பாச்சுவதே அதன் குறிக்கோளாக இருந்து வந்திருப்பதைத் தமிழுலகம் நன்கு அறியும்.

### தமிழ்ப் பணி :

கடந்த முப்பத்துநான்கு ஆண்டுக்காலத்தில் அடக்கமாகவும் ஆழமாகவும் ஞானசம்பந்தம் இயற்றிவந்திருக்கும் அறப்பணிகள் அனைத்தையும் பட்டியலிட்டுக் காட்ட இடமில்லை; அது தேவையும் இல்லை. தமிழ்மொழி குறித்த பன்னோக்குக் கட்டுரைகளை உலகிற்கு இடையறாது ஞானசம்பத்தம் வழங்கிவந்திருக்கிறது. மொழி இயல், சொல்லாய்வு, இலக்கியத் திறனாய்வு, இலக்கண நுட்பம், கவிதை, புதினங்கள், நாடகம், சிறுகதை, பழஞ்சுவடி பெயர்த்தெழுதிய புதிய நூல்கள், உரைவளங்கள், தகவல்கள், நுண்ணாய்வு, துணுக்குகள், வரலாற்றுவளம், மரபுச்செய்திகள், என்றெல்லாம் மொழியியல்வளர்ச்சியில் ஞானசம்பந்தம் வழங்கிய கட்டுரைக் கொடைகள் அளவற்றன.

### சிவநெறித் தொண்டு :

பல்வேறு மதக்கோட்பாடுகள், சைவமரபு, சைவ நூல்கள், சைவஞ்சார்ந்த நுட்பங்கள், திருமுறைகள், சாத்திரங்கள், புதிய உரைகள், ஆய்வுக்கட்டுரைகள், மொழிபெயர்ப்பு, பிரபந்த வகை குறித்த விரிவான ஆய்வுகள், புராணங்கள், சம்பிரதாயங்கள்,

பண்டார சாத்திரங்கள், வேத ஆகமச் செய்திகள், கல்வெட்டுக்கள் முதலியன குறித்த சமயஞ்சார்ந்த கட்டுரைகளை வழங்கிய ஞானசம்பந்தம், அறிஞர்களிடையே 'மேற் பார்வை' ஒப்புநோக்கு நூலாகவிளங்கும் ஆழமுடையதாகவும் திகழ்கிறது.

ஞானுனுபவம் மிக்க குருமகாசந்நிதானங்களின் அருளுரைகளை வழங்கியும், எதிர்காலம்பற்றிய விளக்கங்களைத் தந்தும் ஞானசம்பந்தம் சமுதாய மக்களின் அகவிருளை ஓட்டும் ஒளி விளக்காகத் திகழ்வதை அன்பர்கள் நன்கு அறிவர்.

## அன்பர்கட்கோர் அரிய வாய்ப்பு :

தருமையாதீனம் 24 ஆவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சண்முகதேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் தோற்றுவித்தருளிய இதழை அவர்கள் காலத்தில் ஆசிரியப் பொறுப்பேற்றும், தமது ஆட்சிக்காலத்தில் புதிய பொலிவோடு வெளிவரச்செய்தும், 25 ஆவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ கயிலை சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் புரந்தருளினர்கள். ஸ்ரீலஸ்ரீ கயிலைக்குருமணி அவர்களின் அருளாட்சிக் காலத்தில் ஆசிரியராக அமர்ந்து ஞானசம்பந்தம் நல்லிதழை ஆழ்ந்த கருத்து வளம் மிக்கதாய் வெளியிட்டு, இதுபோது தருமையாதீனத்தின் 26 ஆவது குருமகாசந்நிதானமாகத்திகழும் ஸ்ரீலஸ்ரீ சண்முகதேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் இவ்விதழின் வளர்ச்சியில் பெரும் நாட்டங்கொண்டு நாளும் நாளும் போற்றிப் புரந்து தமிழகத்தின் தலைசிறந்த சமய இதழாக உயர்த்தி இதனை வளர்த்து வருகிறார்கள். 'ஞானசம்பந்தம் பதிப்பகம்' அமைத்து நிலை நிதி நிறுவி அரிய நூல்கள் பலவற்றைத் தமிழுலகத்திற்கு அடக்க விலையில் பதிப்பித்து வழங்கி வருளும் குருமணி அவர்களின் திருவுள்ளம் 'ஞானசம்பந்தம்' இதழுக்கு ஆயுள் உறுப்பினர்களைச் சேர்த்து என்றும் நின்று நிலவ புதியவாய்ப்பினை அன்பர்களுக்கு வழங்கியருளியிருக்கிறது.

## இல்லந்தேடிவரும் இதழ் :

ஞானசம்பந்தம் இதழின் ஆண்டுச்சந்தா ரூபாய் ஆறு மட்டுமே. பல்வேறு அலுவல்களில் நினைவோடு சந்தாவைப் புதுப்பிக்க அன்பர்கள் மறப்பது இயல்பே. ஞானசம்பந்தம் இல்லந்தேடி வாழ்நாள் முழுவதும் வருதற்கு ஆயுள் சந்தா செலுத்தும் அரிய வாய்ப்பு இப்போது வழங்கப்பெற்றிருக்கிறது.

நூறு ரூபாய் செலுத்தினால் அன்பர்கள் ஆயுள் உறுப்பினர்களாக ஏற்கப்பெறுவர். இதனை ஒரே தவணையிலோ அன்றி இரண்டு அல்லது நான்கு தவணைகளிலோ செலுத்தி ஆயுள் உறுப்பின ராகலாம். ஆயுள் சந்தா செலுத்துபவர்களுக்குப்பின் அவர்கள் சந்ததியினர்க்கும் ஞானசம்பந்தம் வந்து சேர வகை செய்யப்பட் டிருக்கிறது. தமது ஆயுட் சந்தாவை ஏனையோர்க்கோ அன்றிப் பிற நிறுவனங்களுக்கோ மாற்றித்தரவும் ஞானசம்பந்தம் வகை செய்து தருகிறது.

ஆயுள்சந்தாஅறிவித்த இரண்டாண்டிற்குள் முன்னூற்றைம் பதற்கும்மேற்பட்ட ஆயுள்உறுப்பினர்கள் ஞானசம்பந்தத்திற்குச் சேர்ந்திருப்பது நம்பிக்கையூட்டுகிறது. தமிழகத்திலும், கடல் கடந்த நாடுகளிலும், ஆயிரத்துக்கும்மேற்பட்ட இல்லங்களில் ஒளியூட்டும் ஞானசம்பந்தம் இதழை, சந்தாசெலுத்தியும், ஆயுள் உறுப்பினராக இணைந்தும் மேலும் வளர்க்கவேண்டிய கடமை சைவத் தமிழ் அன்பர்களுக்கே உரியது.

## பணியும் பாராட்டும் :

அவ்வக் காலங்களில் ஞானசம்பந்தத்தின்பால் பேரீடுபாடு கொண்ட அருளாளர்களும் - சான்றோர்களும் - பெருமக்களும், அதன் தூய தொண்டினைப் பாராட்டி வாழ்த்தியிருக்கின்றனர்.

" சிவம் என்றால் மங்களம். மங்களமான சைவ சம்பந்தமான நூல்கள் கட்டுரைகள் மூலமாக மக்களுக்கு ஞானசம்பந்தத்தைப் புகட்டுகிறது ஞானசம்பந்தம் "

—ஸ்ரீ காஞ்சி காமகோடிபீடம் - சங்கராசாரிய சுவாமிகள்.

" ஞானசம்பந்தம் ஒரு சிறந்த கருவூலமாகவும், திருவருட் பேற்றின் பெருமை உணர்த்தும் சிறந்த சஞ்சீவியாகவும் திகழ் கிறது "

—மதுரை ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தரதேசிக பரமாசாரிய சுவாமிகள்.

" ஞானமே திரு. ஞானநெறியே திருநெறி. ஞானசம்பந்தமே திருநெறியின் பயன். இத்திருஞானசம்பந்தம் வழங்குவது குரு ஞானசம்பந்தம் "

—காஞ்சிபுரம் ஸ்ரீலஸ்ரீ ஞானப்பிரகாசதேசிக சுவாமிகள்.

"திருவருட் சிந்தனைகளைக் கட்டுரை வடிவில் தாங்கி ஞான சம்பந்தம் மக்கள் ஊனசம்பந்தம் நீக்கி அருட்பெருகு சிவஞானம் பரப்பி வருவது உலகறிந்த ஒன்று"

—ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருள்நந்தித்தம்பிரான் சுவாமிகள்

"சமயப் பிரசாரத்திற்கு உதவும் சாதனங்களில் இது முக்கியமானது. மற்றும் அதன் பெயருக்கு ஏற்ப சைவமும் தமிழும் நல்ல முறையில் செழித்து ஓங்கத் தொண்டு செய்கிறது.

—முன்னாள் உயர்நீதிபதி திரு. ஆர். சதாசிவம்.

"தருமை ஆதீனம் ஞானசம்பந்தத்தின் மூலம் மக்கள் உய்யும் பொருட்டுச் சமய நன்பொருள்களையும், இலக்கிய இன் பொருள்களையும் வழங்கி வருவது தமிழ்நாடு செய்த தவப் பயனாகும்."

—முன்னாள் அமைச்சர் திரு. ஓ. வி. அளகேசன்.

"அஞ்ஞான இருளில் மூழ்கித் தவிக்கும் மக்களுக்கு மெய்ஞ் ஞானத்தை வாரி வழங்கி, மெய்ஞ்ஞானத்தோடு தொடர்பு படுத்துதலின் 'ஞானசம்பந்தம்' என்னும் பெயர் மிகவும் பொருத்தமாக அமைந்துள்ளது.

—சிதம்பரம் டாக்டர் திரு. கே. அரங்கசாமிப்பிள்ளை.

"இத்தனை காலமாக இந்த மாளிகை (ஞானசம்பந்தம்) சமயத்திற்கும் - இலக்கியத்திற்கும் செய்துள்ள அரிய பணிகளை நான் நன்கறிவேன். இந்தமாளிகை நல்ல தமிழையும் வளர்த் திருக்கிறது. இதன் வாசகர்களைக் கயிலை முதல் கன்யாகுமரி வரை அடிக்கடி மகாசந்நிதானத்துடன் சகல க்ஷேத்திரங்களுக்கும் அழைத்துச் சென்றிருக்கிறது. புண்ணிய நதிகளுல் நீராட வைத் திருக்கிறது."

—பத்திரிகை ஆசிரியர் நாரதர் திரு. ஸ்ரீநிவாசராவ்.

"இவ்விருபதாம் நூற்றாண்டில் உலகாயத அறிவும், வேற்று மொழிகளும் பெருநெறிய சைவத்திற்கும் 'தேனினும் இனிய செந் தமிழுக்கும் விளைத்த பேரிடரை, ஞானசம்பந்தம் தன்னேரில்லாத் தனது சமய மொழிப் பணிகளால் அறகளைந்து வருகிறது"

—தொழிலதிபர் மதுரை, திரு. கருமுத்து தியாகராஜசெட்டியார்.

**புத்தாண்டில் ஓர் வேண்டுகோள் :**

இத்தகைய பல்துறைச் சான்றோர்களின் வாழ்த்துக்களையும் பாராட்டுரைகளையும் ஞானசம்பந்தம் மகிழ்வோடுநினைவுகூர்ந்து மேலும், புதியஉற்சாகத்தோடு தொண்டாற்ற முப்பத்தைந்தாம் ஆண்டில் நுழைகிறது. திருவருளும் குருவருளும் துணை நிற்க வழக்கம்போல் அன்பர்களின் பூரண ஆதரவு மேலும் மேலும் கிடைக்கும் என்ற நம்பிக்கை அதற்குண்டு. சைவத் தமிழ் அன்பர்கள் ஞானசம்பந்தம் இதழின் சந்தாதாரர்களாகத் தாம் இணைந்தும், தமது உறவினர்களையும் நண்பர்களையும் இணைவித்தும், தம்மை உயர்த்திக்கொள்வதோடு, ஞானசம்பந்தத்தின் உயர்ச்சிக்கும் வழிகோலிச் செந்தமிழ்ச் சொக்கன் திருவருளால் நலம் பல பெற்று உய்வார்களாக.

திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனம்

இருபத்தாறுவது குருமகாசந்நிதானம்

**ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்**

**மாத ஜன்மநட்சத்திர வழிபாடு**

நிகழும் இராட்சச ஆண்டு மார்கழித்திங்கள் 7 ஆம் நாள் (22-12-75) திங்கட்கிழமை ஆயில்ய நட்சத்திரத்தன்று பூம்புகாரில் உள்ள, சாயாவனம் என வழங்கும் திருச்சாய்க்காடு, ஸ்ரீ குயிலினும் நன் மொழியம்மை உடனுறை ஸ்ரீ சாயாவனேசுவரர் திருக்கோயிலிலும், பல்லவனீச்சுரம், ஸ்ரீ சௌந்தரநாயகி உடனுறை ஸ்ரீ பல்லவனேசுவரர் திருக்கோயிலிலும் விசேஷ அபிஷேக ஆராதனைகளுடன் சிறப்பு வழிபாடு நடைபெறும். திருச்சாய்க்காடு - பல்லவனீச்சரத் திருப்பதிகப்பாராயணமும், விரிவுரையும் அவ்வத்திருக் கோயில்களில் நிகழ்த்தப் பெறும். திருச்சாய்க்காடு - திருப்பல்லவனீச்சரம் திருப்பதிகம் என்ற நூல் வழங்கப்பெறும். அன்பர்கள் கலந்து கொண்டு வழிபட்டு இன்புறுவார்களாக.

உ

குருபாதம்

திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனத்திற்குச் சொந்தமான

திருக்கடவூர் ஸ்ரீ அமிர்தகடேசுவரசுவாமி தேவஸ்தானத்தில்

சலவைக் கல்லில் பொறித்துப் பதிக்கப்பெற்ற

ஸ்ரீ அபிராமிஅம்மை பதிகக்கல்வெட்டுக்களைத் திறந்துவைத்து

தருமையாதீனம் 26 ஆவது குருமகாசந்நிதானம்

**ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்**

வழங்கியருளிய

# ஆசியுரை

( 9—8—75 )

**அழகுக்கு ஒருவரும் ஒவ்வாதவல்லீ :**

அருளே வடிவானவள் அம்பிகை. அவ்வன்னை எண்ணிலா நாமரூபங்களோடு தன்னை வழிபடும் அன்பர்களுக்குப் பன்னலமும் வழங்குதற் பொருட்டுப் பல தலங்களிலும் எழுந்தருளியுள்ளாள். திருக்கடவூரில் அப்பராசக்தி அழகுக்கு ஒருவரும் ஒவ்வாத வல்லியாய் - அபிராமி தேவியாய் எழுந்தருளி விளங்குகின்றாள். அன்னை அபிராமியின் அருளைப் பெறுதற்குரிய சிறந்த தோத்திர நூல் அபிராமி அந்தாதி. இந்நூலைப் பாடிய அபிராமி பட்டர் அவ்வம்பிகைமீது மேலும் இரு பதிகங்களைப் பாடியுள்ளார். அபிராமி அம்மைப் பதிகம் என்ற பெயருடைய அவ்விரு பதிகங்களின் பாடல்களும் நம் மனத்தைக் கசிவித்துத் தேவியின் திருமலரடிகளில் நம்முயிரை ஒன்றவைக்கும் உயர்வுடையனவாய்த் திகழ்கின்றன. இந்நூல்களில் மிக்க ஈடுபாடு கொண்டவர்களும் இவற்றைப் பல்காலும் ஓதிப் பழகித் தேவியின் திருவருளால் அருள் நலங்கள் பலவற்றைப் பெற்றவர்களும் ஆகிய அன்பர்கள் பலர். அவர்களில் சென்னை சேனி செட்டியார், வலையப்பட்டி மலையாண்டி செட்டியார் ஆகியோர் தங்கள் உபயமாக அன்பர்கள் பலரும் ஓதிப் பயனடையும் வண்ணம் இப்பதிகங்களைத் திருக்கடவூர் அபிராமி அம்மை சந்நிதியில் சலவைக் கற்களில் பொறித்துப் பதிக்கவேண்டு

மெனக் கருதி இன்று அப்பணியை நிறைவேற்றித் திறந்து வைக்கச் செய்துள்ளனர்.

இன்று ஆடிப்பூர நன்னாள். ஆடிப்பூரம் அம்பாள் அவதரித்த நாளாகக் கொண்டாடப்பெறுகிறது. அம்பிகைக்கு உரிய நாளாகிய ஆடிப்பூர நன்னாளில் அம்மையின் அருட்பாடல்களை சந்நிதியில் சலவைக் கல்லில் பதித்துவைப்பது மிகப் பொருத்தமாக அமைந்துள்ளது.

## நிஷ்காமிய பக்தி :

பெறுதற்கரிய மக்கட் பிறப்பினைப் பெற்றோர் அனைவரும் தனக்குத் தநு (உடம்பு) கரண (மனம், புத்தி, சித்தம், அகங்காரம்) புவன (உலகம்) போக (இன்பத் துன்ப) ங்களைத் தந்து காக்கும் இறைவனை நன்றியறிதலோடு வழிபடக் கடமைப் பட்டவர்.

> " வாழ்த்த வாயும் நினைக்க மடநெஞ்சும்
> தாழ்த்தச் சென்னியும் தந்த தலைவனைப் "

பக்தியோடும் நன்றியுணர்வோடும் வழிபடவேண்டும். ஞானியர்களும் அருளாளர்களும் அறிவுடைய பெருமக்களும் நிஷ்காமியமாக (பலனை விரும்பாது) இறைவன்பால் பக்திசெய்வது நமது கடமை என்று வழிபடுவர். அன்போடு தன்னை வழிபடும் பக்தர்கட்கு எவ்வேளையில் எவ்வுதவிகள் தேவை என்பதை அவ்விறைவனே அறிந்து அவர்களைப் பாதுகாக்கின்றான்.

## காமிய பக்தி :

" நன்றே வருகினும் தீதே விளைகினும் நானறிவது ஒன்றேயுமில்லை " என்று இறைவன்மேல் பாரத்தைப் போட்டுவிட்டு பக்தி செய்யும் அன்பர்கள் உயர்ந்த நிலையிலுள்ளவர்கள். சாதாரண நிலையில் உள்ளவர்கள் இம்மை வாழ்விற்கு வேண்டும் பல்வகை நலங்களைத் தங்களுக்கு வழங்கி அருளவேண்டும் என இறைவன்பால் கேட்டுப் பலனை எதிர்பார்த்துப் பக்தி செய்வர். பயன் கருதிச் செய்யும் இதற்குக் காமியபக்தி என்று பெயர். பெரியோர்கள், அத்தகைய நிலையினரும் இறைவன்பால் கேட்டுப் பெறத்தக்கப் பல நலன்களைத் தொகுத்துக் கேட்கும் முறையில் பல்வகைத் தோத்திரப் பாடல்களைப் பாடியுள்ளனர். அபிராமி பட்டர் அபிராமி அம்மையிடம் கேட்டுப் பெறத்தக்க பேறுகளைக் குறித்து முதல் பதிகத்தின் முதற்பாடலில் கூறுகிறார். அவற்றைச் சிந்திப்போம்.

பேறுகள் பதினாறு :

மனித வாழ்க்கையில் பெறத்தக்க பேறுகள் பதினாறு. அவற்றைப் பெற்றோரே வையகத்தில் வாழ்வாங்கு வாழ முடியும். வாழ்த்துரை கூறும் பெரியோர் "பதினாறும் பெற்றுப் பெருவாழ்வு வாழ்க" என வாழ்த்துவதைக் காணலாம். இவ் வாழ்த்துரையில் "பதினாறும் பெற்று" என்பதற்கு "பதினாறு குழந்தைகளைப் பெற்று" என்பது பொருளல்ல; பேறு - செல்வம். வாழ்க்கையில் மனிதன் அடையத்தக்க செல்வங்கள் பதினாறையே இத்தொடர் குறிக்கிறது.

"கலையாத கல்வியும் குறையாத வயதுமோர்
கபடுவா ராத நட்பும்
கன்றாத வளமையுங் குன்றாத இளமையும்
கழுபிணி யிலாத உடலும்
சலியாத மனமுமன் பகலாத மனைவியும்
தவறாத சந்தா னமும்
தாழாத கீர்த்தியும் மாறாத வார்த்தையும்
தடைகள்வா ராத கொடையும்
தொலையாத நிதியமும் கோணாத கோலுமொரு
துன்பமில் லாத வாழ்வும்
துய்யநின் பாதத்தில் அன்பும்உத விப்பெரிய
தொண்டரொடு கூட்டு கண்டாய்
அலையாழி அறிதுயிலு மாயனது தங்கையே!
ஆதிகட வூரின் வாழ்வே!
அமுதீசர் ஒருபாகம் அகலாத சுகபாணி!
அருள்வாமி! அபிராமி யே!"

கற்ற கல்வி நெஞ்சகத்தில் நிலைத்து நின்று பயன் தரவேண்டும். படித்தது மறந்து போனால் அப்படிப்பால் விளையும் பயன் என்ன இருக்கிறது? எனவே கலையாத கல்வி வேண்டும் என்று கேட்கிறார். நிறைந்த ஆயுள் வேண்டும் என்பது இரண்டாவது வேண்டுகோள். இப்பிறப்பிலே இறைவனருள் பெறுதற்குரிய தவத்தைச் செய்தற்கு நீண்ட வாழ்நாள் தேவை. ஆதலால் குறையாத வயது வேண்டுகிறார். நல்ல நண்பர்கள் அமைய வேண்டும். வஞ்சகமில்லா நண்பர்கள் நமக்கு நற்றுணையாவர், எனவேதான் கபடு வாராத நட்பு வேண்டும் என்கிறார்.

வளங்கள் சுருங்கினால் வாழ்வு சுருங்கும் அல்லவா? எனவே குன்றாத வளமை வேண்டும். இளமைக் காலம் வாழ்வின் பொற்காலம். அக்காலத்தில் நோய் நொடிகள் வந்து உடல் நலம்

கெட்டிருந்தால் கல்வி நலம் போன்றவற்றை அடைய முடியா தல்லவா? எனவேதான் குன்றாத இளமை வேண்டப்படுகிறது. நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம். எத்தனை வளங்கள் இருந்தாலும் நோயுள்ளவன் அவற்றை அனுபவிக்க முடியுமா? ஆதலால் தான் கழுபிணியில்லாத உடல் வேண்டும் என்று கேட்கிறார். மனம் ஒரு நிலைப்பட்டு உறுதி கொள்ளாது நடுங்கு மானால் செயல் துணிவு பிறவாது. எனவே சலியாத மனம் வேண்டும். அன்பு குறையாத மனைவியும், பிழை படாத மக்கட் செல்வமும், குன்றாத புகழும், சொன்ன சொல்லைக் காப்பாற்றும் நிலைமையும், தடையில்லாத கொடையும், வற்றாத செல்வமும், நேர்மையும், துன்பமில்லாத வாழ்வும் தேவை. எல்லாவற்றுக்கும் மேலாகக் கடவுளிடம் நீங்காத பக்திச் செல்வமும் வேண்டும் என்கிறார்.

அடியார் நடுவுள் இருக்கும் அருள் இறுதியாகக் கேட்கப் பெறுவது. அடியவர்கள் பாதுகாப்பில் இருந்தால் எந்தவிதத் துன்பங்களும் இன்றி நாம் வாழலாம் என்பார் "தொண்டரொடு கூட்டுக" என்று கேட்கிறார்.

## அருள்தர வேண்டுதல் :

முதற் பதிகத்தின் முதற் பாடலில் எதிர்மறை வகையால் பதினாறு பேறுகளை வேண்டிய அபிராமி பட்டர், இரண்டாவது திருப்பதிகத்தின் இறுதிப்பாடலில் உடன்பாட்டு வகையால் இப் பேறுகளை அருளுமாறு அன்னையிடம் முறையிடுகிறார். முதற் பாடலில் குறிக்கப் பெற்ற பேறுகள் சிறிய மாற்றங்களொடு இறுதிப் பாடலிலும் உடன்பாட்டு வகையால் குறிக்கப் பெற்றி ருக்கும் அழகு கருதி மகிழத் தக்கதாக விளங்குகின்றது.

" சகலசெல் வங்களுந் தரும்இமய கிரிராச
    தனயைமா தேவி! நின்னைச்
  சத்தமாய் நித்யமுள் ளத்தில்து திக்குமுத்
    தமருக் (கு) இரங்கி மிகவும்
அகிலமதில் நோயின்மை கல்விதன தான்யம்
    அழகுபுகழ் பெருமை இளமை
  அறிவுசந் தானம்வலி துணிவாழ் நாள்வெற்றி
    ஆகுநல் லூழ்நு கர்ச்சி
தொகைதரும் பதினாறு பேறுந்தந் தருளி நீ
    சுகானந்த வாழ்வளிப் பாய்!
  சுகிர்தகுண சாலி!பரி பாலி!அநு கூலி!திரி
    சூலி!மங் களவி சாலி!

மகவு நான் ; நீதாய் அளிக்கொ ணாதோ ? மகிமை
வளர்திருக் கடவூ ரில்வாழ்
வாமி!சுப நேமி!புகழ் நா மி! சிவ சாமிமகிழ்
வாமி! அபி ராமி! உமையே!"

இமவான் மகளாகிய பார்வதி தேவியே! உண்மையன்போடு உள்ளத்தில் உன்னைத்தியானிப்பவர்களுக்கு இரங்கிநோயின்மை கல்வி முதலிய பதினாறு பேறுகளும் வழங்கி அவர்களை வாழ்விப் பவளே ! அடியேனும் அவ்வாறே பக்தி செய்துதானே வேண்டு கிறேன். நானோ மகன்; நீயோ தாம்; தனயன் வேண்டும் நலங் களைத் தாயாகிய நீ அளித்தல் கூடாதா என்று கேட்கிறார்.

## இன்பம் பெறுக இவ்வையகம் :

மக்களின் உய்விற்கு வழிகாட்டியருளுவதே அருளாளர் களின் நோக்கமாகும். அன்னை அபிராமியின் திருமுன்பில் நாம் வேண்டத்தக்க பேறுகள் இவை இவை என்பதனை நமக்கு அறி வுறுத்த வந்த அபிராமி பட்டர், தாம் பேறுகளை வேண்டுவார் போல, நமக்கு அன்னைமுன் முறையிடக் கற்றுத்தருகின்றார். குழந்தையின் பொருட்டுத் தாய் மருந்துண்பது போல, மக் களின் பொருட்டு, அன்னையிடம் தாம் வேண்டுவார் போல் முறை யிட்டு நம்மவர்களுக்கு வழிகாட்டி அருளுகின்றார்.

அன்னையின் திருமுன்பில் வேண்டத்தக்க நலன்களை எதிர் மறையாகவும், உடன்பாடாகவும் அருளிச் செய்து வழிகாட்டி யருளிய அபிராமி பட்டர், அன்னையின் திருவடிகளில் அன்பு பூண்டு மகிழ, நம்மை அவ்வம்மையின்பால் ஆற்றுப் படுத்தவும் செய்கிறார். தாம் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம் என்ற அருட் கருணை இங்கே மலர்கிறது.

## ஆற்றுப்படை :

வறுமையைப் போல் கொடிய நோய் பிறிதில்லை. இக் கொடு நோயில் உழன்று, வாடாது இருக்கவே மாந்தர் விழைவர், மக்களைப்பார்த்து அபிராமிபட்டர் வினவுகின்றார்; மானுடர்களே ! 'வறுமை நிலையின மற்றொருவர்முன் எடுத்துக் கூறி அவரால் இழிக்கப்பட்டு வருந்தும் நிலை நமக்கு வரவேண்டாம் என்ற எண்ணம் உங்களுக்கு இருக்குமானால் 'திரிபுரை' என்ற திரு நாமம் பூண்ட எங்கள் அன்னை அபிராமியின் திருவடிகளை இடை யறுது நினைந்து அவள் திருவடியைச் சேருங்கள் !' என்கிறார். 'அவ்வம்மையின் இயல்பு யாதென்பீர்களாயின், தம்மாட்டு அன்பு

வைத்திருக்கும் அடியார்களை, நல்ல தவங்களைக் கல்லாமையையே கற்றவர்களாகிய கொடிய கயவர்கள்பால் எந்த ஒரு நேரத்திலும் சென்றிரக்காது பாதுகாக்கும் பெருங்கருணையுடையவள்' என்று அறிவுறுத்துகின்றார்.

" இல்லாமை சொல்லி ஒருவர்தம் பாற்சென் றிழிவுபட்டு
நில்லாமை நெஞ்சில் நினைகுவி ரேல்நித்த நீடுதவம்
கல்லாமை கற்ற கயவர்தம் பாலொரு காலத்திலும்
செல்லாமை வைத்த திரிபுரை பாதங்கள் சேர்மின்களே. "

என்ற திருப்பாட்டு அபிராமி அம்மை ஆற்றுப்படையாகத் திகழ்கிறது. அம்மை திருவடிக்கு நம்மை ஆற்றுப் படுத்தும் அபிராமி பட்டரின் அபிராமி அந்தாதி அருட்பாடல்போல், ஐபனுகிய பரமேசுவரன் திருவடிக்கு நம்மை ஆற்றுப் படுத்துகின்றார் திருஞானசம்பந்தர். இல்லாதார் கடைத்தலையில் கையேற்று ஏங்காத பெருநிலை வாய்க்க வேண்டுமானால் சீகாழிப் பெருமான் திருவடி சேருங்கள் என்ற அருளிப்பாடு, உயிர்களின் உய்தியில் அவர்கள் கொண்டிருந்த பெருங்கருணையினை விளக்குகின்றது.

" நச்சிநீர் பிறன்கடை நடந்துசெல்ல நாளையும்
உச்சிவம் எனும்உரை உணர்ந்துகேட் பதன்முனம்
பிச்சர்நச் சரவரைப் பெரியசோதி பேணுவார்
இச்சைசெய்யு மெம்பிரான் எழில்கொள்காழி சேர்மினே'

என்பது திருஞானசம்பந்தரின் அருள் பாடல்.

## இறையுணர்வு தலைப்படல் வேண்டும் :

அம்மையின் திருவடிகளைச்சேர்ந்து உய்திபெறுங்கள் என்று அபிராமி பட்டர் அறிவுறுத்தியும் அறியாமையினால் வணங்காத மாந்தர்க்கு வேறு ஒரு காட்சியினையும் காட்டி அவர்களை அன்னையின் திருவடிகளில் செலுத்துகின்றார். அன்னை 'சரணகமலாலயத்தை அரை நிமிட நேரமாவது நினையுங்கள். அன்னையைத் தோத்திரஞ் சொல்லிப் போற்றுங்கள் ! திருவடிகளைத் தொழுதலைச் செய்யுங்கள் ! அன்னையின் மின்னலை ஒத்த பேரொளி வடிவத்தை ஒரு கணநேரம் சிந்தியுங்கள் என்கிறார்' இப்பத்திமைச்செயலைச் செய்யாதவர்கள், வாழ்மை, குடிப்பிறப்பு, தோத்திரம், கல்வி, நற்குணம் முதலியன இழந்து, நாள்தோறும் பிச்சைப்பாத்திரம் ஏந்தித் தெருவில் திரியும் நிலைபெறுவர் என

உளங்கொள்ள விளக்குகின்ஞர் அஞ்சியாகிலும், அன்பு பட்டாகிலும் உயிர்கள் இறையுணர்வு கலைப்படவேண்டுமென்ற கருணை இங்கே விளங்குகின்றது.

"தோத்திரம் செய்து தொழுதுமின் போலுநின் தோற்றமொரு
மாத்திரைப் போது மனத்தில்வை யாதவர் வண்மைகுலம்
கோத்திரம் கல்வி குணங்குன்றி நாளுங் குடில்கள்தொறும்
பாத்திரங் கொண்டு பலிக்குழ லாநிற்பர் பாரெங்குமே."

அபிராமி பட்டரின் இப்பாடலை சிந்திக்கும்போது, தண்டியலங்கார மேற்கோள் பாடல் ஒன்று நினைவில்வருகிறது. அபாவ அணியின் ஒரு பகுதியாகிய 'உள்ளதன் அபாவம்' என்ற அணி அமைந்த அப்பாடல் ஓர் இரவலனின் சிந்தனையை விளக்குவதாக அமைகிறது. திருவோடு ஏந்தி வஞ்சகர்களது இல்லத்து வாயிலில் நின்று இரந்து வருந்தியபோது அவன் சிந்தனை இறைவனை எண்ணுகின்றது. பொருளை வைத்துக்கொண்டு இல்லை என்னும் வஞ்சரை இன்று வணங்கும் மனம், அன்றே சிவபெருமானை வணங்கியிருக்குமானல் இந்த இழிவு வருமா என அவன் நெஞ்சு இடித்துரைக்கிறது.

"கரவொடு நின்ஞர் கடிமனையில் கையேற்று
இரவொடு நிற்பித்த தெம்மை — அரவொடு
மோட்டாமை பூண்ட முதல்வனை முன்வணங்க
மாட்டாமை பூண்ட மனம்."

என்ற பாடல் வழிபாடும், வணக்கமுமே நம்மை வாழ்விக்கும் என்பதனை அழகுற விளக்கிநிற்கிறது.

**அருச்சனைபற்றி ஒரு விளக்கம்:**

திருக்கோயில்களில் நடைபெறும் வழிபாடுகளில் அன்பர்கள் சில நடைமுறைகளை உணரவேண்டும். "கோயில்களில் அர்ச்சனைச் சீட்டுக்களை வாங்கிய பிறகும் சிவாசாரியர்கள் காணிக்கைகள் கேட்கின்றனரே! இது சரியா? "அர்ச்சனைக்குத் தரப்பெறும் தேங்காய், பழம் முதலியவற்றில் பாதியை அர்ச்சகர் எடுத்துக் கொள்கிருரே இது பொருந்துமா என்று சிலர் கேட்கின்றனர். இதுபற்றிய ஒரு உண்மையை மக்கள் அறியவேண்டும்.

அருச்சனைச் சீட்டு திருக்கோயில்களில் நாம் அருச்சனை செய்வதற்கு அனுமதி வழங்கும் ஓர் அடையாளமேயாகும். அத்தொகை திருக்கோயில்களின் வளர்ச்சிப் பணிகளுக்கே பெரும்

பாலும் செலவிடப்பெறும். இவ்வருவாயிலிருந்து ஒரு சிறு பகுதியே சிவாசாரியர்களுக்குப் பகிர்ந்தளிக்கப்படுகிறது.

பக்திநெறி சிறக்க ....

சிவாசாரியர்களை சம்பளம் பெறும் ஊழியர்கள் எனக் கருதுவது தவ்று, அவர்களை சிவபெருமானாகவே கருதுதல் வேத ஆகம மரபு. இறைவனுக்குப் பணிசெய்யும் சிவாசாரியர்களை சாதாரண ஊழியருள் ஒருவராகக் கருதாது பிரித்துச் சிறப்பிக்க வேண்டும். இறையருளில் நம்மைச் செலுத்தும் அவர்களைப் பேணும் பொறுப்பு நமக்கு உண்டு. பக்தர்களின் காணிக்கைகளினால் அவர்கள் வாழ்வு நடைபெறுமானால்தான், பக்திநெறி சிறக்கும்.

மேலும், இறைவன் முன்பில் நாம் அருச்சனைப் பொருட்களை நிவேதிக்கச் செய்கின்றோம். பெருமான் நம்முடைய அன்பினால் நாம் பெற்ற பொருள்களை ஏற்றருளுதற்காக அவனுக்குச் 'சுவர்ண புஷ்பம்' என்ற காணிக்கை வைத்தல் வேண்டத்தக்கதே. திருமணங்களில் மணமகனுக்கோ அன்றி மணமகளுக்கோ திருமணத்தன்று உணவுகொள்ளுமுன் பொருளோ, பவுனோவைப்பதை இன்றும் கொண்டிருக்கின்றோம், திருமணத்தில் மணமக்களை இறையவர்களாகவே கருதுகின்றோம். உணவுகொண்டு மகிழ்விக்க மணமக்களுக்கு அன்பால் பவுன் வைப்பதைப் போன்றதே இறைவனுக்கும் அருச்சனைக் காலத்தில் காணிக்கை வைப்பதன் நோக்கமுமாகும். எனவே, இதனை இறைவனுக்குச் செய்கின்றோம் என்பதே நமது எண்ணமாகவேண்டும்.

வழக்கு மன்றங்களுக்கு நாம் கொண்டு செல்லும் வழக்கினுடைய தன்மைகளுக்கு ஏற்ப, முத்திரைத்தாள் கட்டணம், நீதிமன்றப் பதிவுக் கட்டணம், மேல் நடவடிக்கைக் கட்டணம் முதலிய பல கட்டணங்களைச் செலுத்துகின்றோம். மன்றத்துக்குச் செலுத்துவது செலுத்திவிட்டோமென்று கருதி வாளா இராது. நம் வழக்கினை எடுத்துரைத்து, வெற்றி தேடித்தரும் வழக்குரைஞருக்குத் தனியே கட்டணம் வழங்குகின்றோம். அதுபோல் ஐயன் திருமுன்பில் நம் நல்வாழ்வு குறித்து அருச்சனைபுரியும் சிவாசாரியாருக்குத் தரப்பெறும் காணிக்கைகளை மன மகிழ்வோடு அன்பால் வழங்கும் தகைமை நமக்கு அமைதல் வேண்டும்.

## இறைவணக்கத்தின் உட்பொருள் :

அருச்சனைக்குப்பின் நிவேதனத்தில் ஒரு பகுதியைச் சிவாசாரியர் எடுத்துக்கொண்டால் நாம் குறைபடுகிறோம். இதுவும் உண்மைநிலை அறியாமையால் எழுவதேயாகும். நீங்கள்பெரிதும்

விரும்பும் ஒரு சான்றோர்க்கு, அவர்க்குப் பிடித்தமான ஒரு பொருளை நீங்கள் அன்போடு வாங்கிக்கொண்டுபோய் வழங்குகின்றீர்கள், அதனைப் பெற்றுக்கொண்டவர் அதில் ஒருசிறிது கூடத் தொடாது அப்படியே அதனைத் திரும்ப உங்கள் கையில் தந்துவிடுவாரானால், அவமதிப்பையும் பெருவருத்தத்தையும் அடைவிர்கள். அதுபோல ஆண்டவனுக்கு நாம் படைத்த நிவேதனத்தை அவன் விரும்பி ஏற்றான் என்ற பாவனையில்தான், ஒரு சிறு பகுதியினை எடுத்துக்கொண்டு எஞ்சியதை நம்மிடம் வழங்குகின்றனர். அவர்கள் முழுவதையும் திரும்பவழங்கினாலும் நாம் ஒரு பகுதியை அவர்களிடம் விருப்பத்தோடு கொடுத்து வருதல் வேண்டும். அன்பின் அகலத்தையும், இறைவணக்கத்தில் நிகழும் பாவனைகளின் உட்பொருளினையும் அறியவல்ல சான்றோர்க்கு இந்நிலை நன்கு விளங்கவேசெய்யும்.

அன்பர்கள் திருக்கோயில் வழிபாடுகளில் பக்தி உணர்வோடு ஈடுபட்டு எல்லா நலங்களும் பெற்று இனிது வாழ வேண்டும். இன்று அபிராமி அன்னை திருக்கோயிலில் பயன் தரத்தக்க நிலையான பலாரியொன்றைச்செய்து பக்தி உணர்வைப் புலப்படுத்திக்கொள்ளும் அன்பர்களுக்கும், இக்கல்வெட்டு இங்கே அமைவதற்குத் தங்கள் பக்தி உணர்வால் பெருமுயற்சி மேற்கொண்டவர்களுக்கும் இவ்வழிபாட்டில் ஈடுபட்டுள்ள பக்தர்கள் அனைவர்க்கும் ஸ்ரீ அபிராமி அன்னை உடனாய ஸ்ரீ அமிர்தகடேசப் பெருமான் திருவருளால் எல்லா நலன்களும் விளைக என்று வாழ்த்துகிறோம்.

---

## EXTRACT FROM THE VISITORS' BOOK

**Dharmapuram Adhinam**

Sri Amirthagateswaraswamy Devasthanam, Tirukkadaiyur.

To have visited this temple to-day was a matter of great personal happiness to me and my wife. The temple is well organised and run efficently.

May Lord Shiva and Goddess Abirameswari shower their blessings on all of us.

(S-d) Chettilal,
Lt. Governor,
Pondicherry,
& Ambasador Designate Panama.

11—10—75.

தருமையாதீனம் 24 ஆவது குருமகாசந்நிதானம்
ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்



ஞான சம்பந்த நல்லிதழைத் தோற்றுவித்த
ஞான குரவர் நற்றிருத்தாள் போற்றுதுமே.

தருமையாதீனம் 25 ஆவது குருமகாசந்நிதானம்



இருபத்தா றரையாண்டு இவ்விதழை வளர்த்திட்ட
குருகயிலைச் சுப்ரமண்ய குரவரது அருளுருவம்.

# சிவஞானசித்தியார் தெளிபொருள் விளக்கம்

தருமையாதீனப் புலவர், சித்தாந்தக் கலைமணி
திரு. சி. அருணைவடிவேல் முதலியார்

( மலர் 34. இதழ் 12. பக்கம் 543 இன் தொடர்ச்சி )

சாற்றிய காலம் இங்குத்
தங்கிய வாறி தென்னை ?
தோற்றுவித் தளித்துப் போக்கும்
தொழில்இவை காலம் என்னில்,
போற்றிய பொருளிற் புக்குப்
பிணங்கிடும் பொருட்பின் இன்றும் ;
தேற்றிய இல்வ ழக்குத்
திரவியத் தியல்பி னுமே. 82

## இதன் தெளிபொருள்

நீவிர் ( பிற மதத்தவர் ) ஒரு பொருளாகச் சொல்லிய காலம் 'உண்டு' என்பது எவ்வாறு பெறப்படும்? 'தோன்றி நின்று அழியும் பொருள்கள் கால வயப்பட்டே அங்ஙனம் ஆகலால், அத்தொழில்களைச் செய்விப்பதாகிய காலம் உண்மை பெறப்படும்' என்று கூறினல், அங்ஙனம் தோன்றி நின்று அழிகின்ற அப்பொருள்கட்கு வேறாய்க் காலம் என்பது அறியப்படாமையால், 'அப்பொருள்களே காலம்' என்பதாய் முடியும். மேலும், அழிந்த பொருளுக்குப் பின்னே காலம் அழியாது நிற்கின்றது என்பதற்கும் சான்றில்லை. ஆகவே, 'காலம் என்று ஒரு பொருள் உண்டு' என்றல், 'முயலுக்கும் கொம்பு உண்டு' என்று பேதையர் சிலர் கூறும் மயக்க உரை போல்வதேயாம். அதனல், பொருளின் தன்மையையே நீவிர் 'காலம்' என்கின்றீர் என உணர்க.

## விளக்கம்

பிணங்கிடும் - நும் கூற்றுக்கு மாறாய்விடும். இதனல், 'காலம் உண்டு' என்னும் பிற மதங்களை அவர் மறுக்குமாறு கூறப்பட்டது. 19

எனக்குநீ கிழக்கி ருந்தா
யாகில்மேற் கென்பாய்; என்பால்
எனக்குமேற் கிருந்தான் என்பால்
கிழக்கென இயம்பும்; திக்குத்
தனக்குநாம் கொள்வ தெப்பால்?
சாற்றிடாய்; இல்வ ழக்குத்
தனக்குள தாகும்; உண்மை
தான் இல தாகும் அன்றே. 83

## இதன் தெளிபொருள்

நீ (பிற மத வாதி) எனக்குக் கிழக்குப் பக்கத்தில் இருந்தால், யான் இருக்கின்ற இடத்தை, 'மேற்கு' என்று குறிப்பிடுவாய். அதேசமையத்தில், எனக்கு மேற்கே இருப்பவன் யான் இருக்கின்ற இடத்தை, 'கிழக்கு' என்று குறிப்பிடுவான். ஆகவே, உண்மையில் 'கிழக்கு' அல்லது 'மேற்கு' என்பது எந்த இடத்தை? அதனை நீ வரையறுத்துச் சொல்லவேண்டும். அது முடியாமையால், 'திக்கு உண்டு' என்பது இல்வழக்கே; உள்வழக்கு அன்று என்று தெளிவாயாக.

### விளக்கம்

'மேற்கென்றாய்' என்பது பாடம் அன்று. பால் - இடம். இதனால், 'திக்கு உண்டு' என்னும் பிற மதங்களை அவர் மறுக்குமாறு கூறப்பட்டது. 20

உலகினைப் படைத்தான் என்றாய்
ஒருவன்; இங் குள்ள தாயின்
உலகினைப் படைக்க வேண்டா;
இல்லையேற் படைக்க ஒண்ணா(து);
உலகினுக் குபாதா னந்தான்
உள்ளதாய்க் காரி யத்தாம்
உலகினைப் படைக்கில் அங்கும்
உளதில தாவ துண்டே. 84

## இதன் தெளிபொருள்

நீ (கடவுட் கொள்கை யுடைய மத வாதி) 'ஒருவனாகிய கடவுளே உலகத்தைப் படைத்தான்' என்று கூறினால், உலகம் முன்பே உள்ளதாயிருக்கக் கடவுள் பின்பு அதனைப் படைத்தானோ, அல்லது இல்லாதிருந்த உலகத்தைப் பின்பு படைத்தானோ? உள்ளதாயிருப்பின், உள்ளதைப் பின்பு படைக்க வேண்டுவதில்லை. இல்லாததையே பின்பு படைத்தான் எனின், இல்லது எக்காலத்தும் இல்லதே ஆகையால், இல்லாததை

உள்ளதாகப் படைத்தல் இயலாது. இனி, 'காரணம் முன்பு உள்ளதாயிருக்க அதனினின்றும் காரியமாகிய உலகத்தைப் பின்பு படைத்தான்' எனக் கூறின், அப்பொழுதும் மேற் கூறிய தடை காரியம்பற்றி நிகழும். ஆகவே, 'உலகத்தை ஒருவன் உளனாய்நின்று படைத்தான்' என்றல் எவ்வாற்றானும் பொருந் தாக் கூற்றேயாம்.

## விளக்கம்

'உள்ளதைப் படைக்க வேண்டா; இல்லதைப் படைக்க இயலாது' என்னும் தடை எல்லாப்பொருள்கட்குமேயாதலால், 'காரணம் உள்ளதாகக் காரியத்தைப் படைத்தான்' என்று கூறுதல்மட்டும் எப்படிப் பொருந்தும் என்பது கருத்து. 21

உள்ளது கடாதி போல
உதிப்பித்தான் என்று ரைக்கின்,
மெள்ளவே எங்கு நின்று
விதித்தனன்? உலகின் மீது
வள்ளல்தான் நின்ற னென்னில்,
வந்ததாம் உலகம் முன்னே;
தள்ளிடா தெங்கும் நிற்கின்,
எங்கும்முன் தந்த தாமே. 85

## இதன் தெளிபொருள்

'தோற்றத்திற்கு முன்னேயும் காரியம் உள்ளதே' என்பதற்கு, 'சூக்குமமாய் உள்ளது' என்பதும், 'பின்னர்க் காரியத்தை முதல்வன் தோற்றுவித்தான்' என்பதற்கு, 'தூலமாகத் தோற்றுவித்தான்' என்பதுமே கருத்தாகலின், 'உள்ளதாயின் படைக்கவேண்டுவதில்லை' எனத் தடை நிகழ்த்துதல் பொருந் தாது எனக் கூறின், 'அஃது ஒக்கும்' என்றே வைத்துக்கொண் டாலும், முன்பு மண்ணாகிய காரணத்தினின்றும் குடம் முதலிய காரியங்களைத்தோற்றுவிக்கின்ற குலாலன் ஓர் இடத்தில் இருந்து கொண்டே தோற்றுவிக்கின்றான் ஆதலின், அதுபோலக் கடவுளும் உலகமாகிய காரியத்தைத் தோற்றுவிக்குங்கால் ஓர் இடத்தில் இருந்துகொண்டே தோற்றுவித்தல் வேண்டும்; அத்தகைய இடம் எது?

'உலகத்தின்மேல்தான் இருந்துகொண்டு தோற்றுவித் தான்' எனக் கூறினால், உலகம் முன்பே உள்ளதாக, 'முதல்வன் படைத்தான்' என்றது தோல்வியடையும். இனி 'இறைவன் எங்கும் நிறைந்து நின்றே படைத்தான்' என்று கூறின், அப் பொழுதும் 'எங்கும்' என்று சுட்டப்பட்ட இடம் முன்பே உள்ள தாய்விடும். ஆதலால், 'சூக்குமமாய் இருந்ததைத் தூலமாகத்

தோற்றுவித்தான்' என்று கூறுவதும் பயனில் கூற்றாகவே முடியும்.

### விளக்கம்

தள்ளிடாது - ஓர் இடத்தையும் நீக்கிவிடாமல். "நிற்கின்" என்றது, 'நிற்கும் எனக் கூறினால்' என்றவாறு. "எங்கும்" என்பது எழுவாய். 'எங்கும் எனச் சுட்டப்பட்ட அந்த இடமே முன்னர் இருந்து, பின்னர் முதல்வனைத் தோற்றுவித்தது என்பதாய் முடியும்' என்றவாறு. "உள்ளது படைத்தான் என்றாய்" என்பதற்கு இங்கு உரைக்கப்பட்டதே பொருளாதல் (22) அறிந்துகொள்க.

இல்லது கருணை யாலே
இயற்றினன் இறைவன் என்னில்,
கொல்லரி உழுவை நாகம்
கூற்றமும் கொண்டு தோற்ற
வல்லவன் கருணை என்னே!
வலியினால் வேண்டிற் றெல்லாம்
பல்கவே படைத்தா னாயின்
பித்தரைப் பணிந்தி டாயே. 86

### இதன் தெளிபொருள்

'முதல்வன் உலகத்தைப் படைத்தான்' என்றால், எந்த வகையிலோ ஒருவகையில், 'முன்பு இல்லாததைப் படைத்தான்' என்று ஆகிறது. ஆயின், அங்ஙனம் இல்லாததை ஏன் படைக்க வேண்டும்? 'உயிர்களின்மேல் அவனுக்கு உள்ள கருணைதான் அங்ஙனம் படைத்ததற்குக் காரணம்' என்று நீ (கடவுட் கொள்கை யுடைய மத வாதி) கூறினால், கருணையால் படைப்பவன் நல்லவற்றையே யன்றோ படைத்தல் வேண்டும்? அவ்வா றின்றிக் கொலை செய்தலையே தொழிலாக உடைய சிங்கம், புலி, பாம்பு முதலிய தீயவற்றையும், மற்றும் யமனையும் படைத்துத் துன்பத்தை உண்டாக்கியவனுக்குக் கருணை என்ன இருக்கிறது?

'முதல்வன் எல்லாம் வல்லவன் ஆகலின், அவ்வன்மை காரணமாகத் தான் விரும்பியவற்றை யெல்லாம் படைத்தான்' எனக் கூறின், அப்பொழுது அவன் குறிக்கோள் யாதும் இன்றி மனம் போனவாறே செய்யும் பித்தனாதல் வேண்டும். ஆகையால் நீ அவனைத் தேடிப் புகழ்ந்து வணங்குவதைவிட்டு, உலகில் உள்ள பித்தர்களையே புகழ்ந்து வணங்கலாம்.

### விளக்கம்

'என்' என்னும் வினாப் பெயர் இங்கு இன்மை குறித்து நின்றது. ஓகாரம் இழிவு சிறப்பு. 'என்னே' என்பதை இகழ்ச்சிக் குறிப்பில் வந்த வியப்புச் சொல்லாகக் கொள்ளினும் ஆம்.

(தொடரும்)

# ஆசாரக்கோவை

தருமையாதீனத் தமிழ்ப்புலவர்,
திரு. ந. ரா. முருகவேள், M. A., M. O. L.,

(மலர் 34. இதழ் 12, பக்கம் 547 இன் தொடர்ச்சி)

**ஐம்பெருங்குரவர் :**

அரசன் ஆசிரியர் தாய் தந்தை தமையன் என்னும் ஐவரும் நம் வணக்கத்திற்கு உரிய சிறந்த பெரியோர்கள் ஆவர். இந்த ஐவரையும் நாம் கடவுளுக்குச் சமமாக மதித்துத் தொழுது வணங்குதல் வேண்டும். இஃது அனைவரும் உடன்பட்டு இயைந்த சிறந்த நெறியாகும்.

பெரியோர்கள் சொல்லைப் புறக்கணித்து, நாமே நம் மனம் போனபடி எதனையும் செய்தல் கூடாது. ஏற்றுக்கொண்ட விரதத்தை நிறைவேற்றாமல் குறையாகவிடுதல்கூடாது. கொண்ட விரதத்தை மறத்தல் ஆகாது. உவாக்காலங்களில் பேருண்டி கொள்ளுதலும், பயன்தரும் மரங்களை வெட்டுதலும் கூடாது.

**உண்ணும் முறை :**

மனித வாழ்க்கைக்கு உணவு முக்கியம். ஆதலின் நாம் உண்ணும்போது ஒரு சில நல்லொழுக்க முறைகளைக் கடைப் பிடித்தல் வேண்டும். உண்ணுவதற்குமுன் நீராடுதல்வேண்டும். அல்லது கைகால்களைக் கழுவுதல்வேண்டும். உண்டபிறகு வாயை நன்கு தூய்மையுறக் கொப்பளித்துக் கழுவுதல்வேண்டும். உண்ணுவதற்கு முன்னர் உண்கலத்தைச் சுற்றி நீர் இறைத்து (மண்டலித்து) இறைவனைத் தியானித்து வழிபட்டு உண்ணுதல் வேண்டும். உணவுகொள்ளுதற்கு நெடுநேரத்தை வீணிற் போக்குதல் முறையன்று. கால் கழுவிய நீரின் ஈரம் புலர்வதற்கு முன்பே உண்ணத்தொடங்குக. கால் கழுவிய ஈரம் காயாமல் படுக்கைக்குச் செல்லுதல் ஆகாது. உண்டபின்னும் சிறிதுநேரம் கழித்தே உறங்கப்புகுதல் நலம். உண்ணும்பொழுது கிழக்கு முகமாக அமர்க. தூங்கிவிழாமலும், அசைந்து ஆடாமலும், வீண்பேச்சுப் பேசாமலும், வேறு எதனையேனும் சிந்தித்துக்

கொண்டு இராமலும், சோறு முதலியன சிதறிக் கீழேவிழாமலும், நல்ல முறையில் அமர்ந்து, நன்ருகச்சுவைத்து மென்று உணவு கொள்ளுதல் நலம் பயக்கும். உண்ணுவதற்கு முன்னர் விருந்தினர்கள், வயதானவர்கள், பசுக்கள், பறவைகள், சிறு குழந்தைகள் ஆகியவர்களை முதலில் உண்ணச்செய்தல் வேண்டும். அதற்குப்பின்னரே நாம் உண்ணுதல் முறை. ஒழுக்கத்தில் தவருதவர்கள் இந்நெறியைக் கடைப்பிடிப்பார்கள்.

வாயிற்படிக்கு நேராக இருந்து உண்ணுதலும், வாயிற்படிக்கு நேரே கட்டில்விட்டுப் படுத்தலும் குற்றமாகும். படுத்துக்கொண்டே உண்ணுதல், நின்றுகொண்டே உண்ணுதல், வெள்ளிடை (மைதானம்) ஆன இடத்தில் உண்ணுதல், சுவையை விரும்பி அளவுக்குமேல் உண்ணுதல், படுக்கும் கட்டிலின் மேலிருந்து உண்ணுதல் முதலியன குற்றங்களாகும். உண்ணும்பொழுது நமது வரிசையில் நம்மைவிடப் பெரியவர்கள் இருந்தால் அவர்கள் உண்ணுவதற்கு முன்னர் நாம் உண்ணுதலும், அவர்கள் எழுந்திருப்பதற்குமுன்னர் நாம் எழுந்திருத்தலும், அவர்களை இடித்துக்கொண்டு நெருக்கமாக இருத்தலும்கூடாது. உண்ணும்போது இனிப்புடைய பண்டங்களை முதலிலும், கசப்பான பண்டங்களை இறுதியிலும், ஏனைய சுவையுடைய பண்டங்களை இடையிலும் உண்ணுதல் முறையாகும். நீர் அருந்துங்கால் இரண்டு கைகளையும் சேர்த்துக் குவித்து அருந்துதல் ஆகாது. பெரியோர்கள் கொடுக்கும் பொருளை ஒற்றைக் கையினுல் வாங்குதலும், நாம் அவர்க்கு ஒன்றை ஒற்றைக் கையால் கொடுத்தலும் கூடாது. நம் உடம்பை, உடம்பில் எங்கேனும் தினவு எடுத்தால் இரண்டு கைகளாலும் விகாரமாகச் சொரிதல் கூடாது.

**உறங்கும் முறை :**

மாலைப்பொழுதில் படுத்துத் தூங்குதல், வேற்றூர்க்குத் துணையின்றி வழி நடந்து செல்லுதல், தனியே உணவுகொள்ளுதல், பிறரிடம் வெகுண்டு சண்டையிடுதல் முதலியன கூடாது. இராக்காலத்தில் இருட்டில் புறம்போகாமல் பாதுகாப்பான நல் இடத்தில் தங்கிப் பள்ளிகொள்ளுதலே முறை. படுக்கச்செல்லும் முன், கடவுளை வணங்கி வடக்குத்திசையிலும், வடகிழக்கு, வடமேற்கு, தென்கிழக்கு, தென்மேற்கு முதலிய திசைகளிலும், தலை வைக்காமல் உடம்பில் போர்வை இட்டுக்கொண்டு படுத்தல் நலம். தெய்வத் திருவுருவங்களுக்கும், அந்தணர்களுக்கும் இடையில் புகுந்து நுழைந்து செல்லுதல் ஆகாது. யாரேனும் தும்மினுல் 'நீடு வாழ்க' என்று வாழ்த்துவது பெரியவர்கள் பண்பு. அங்ஙனம் நாம் தும்மும்பொழுது, பெரியோர்கள்

வாழ்த்தினுல் அதற்கு நன்றி தெரிவித்து அவர்களை வணங்குக. நம்மோடு ஒத்த நண்பன் எதிரே வந்தால் அவன்பால் இன்னுரை கூறி, அவனேடு சிறிது தூரம் உடன் செல்லுக.

நல்ல புல் வளர்ந்துள்ள இடம், பயிர் வளர்ந்துள்ள நிலம், பசுவின் சாணம், சுடுகாடு, பலரும் நடக்கின்ற வழி, நீர்நிலை, திருக்கோயில், நிழலுள்ள இடம், பசுக்கள் நிற்கும் இடம், வெண் சாம்பல் உள்ள இடம் முதலிய பத்து இடங்களிலும், நாம் எச்சில் உமிழவோ, மலசலம் கழிக்கவோ கூடாது. பகற்பொழுதில் தெற்கு நோக்கியும், இரவில் வடக்கு நோக்கியும் இருந்து மலசலம் கழித்தல் கூடாது. ஓமத்தீ அல்லது வேள்வித்தீயைப் பகற்பொழுதில் நீர் ஊற்றி அவித்தல் ஆகாது. தண்ணீரில் நின்றுகொண்டும், நடந்துகொண்டும் இல்லாமல், ஒரு கலத்தில் நீரை முகந்துகொண்டு வாய் அலம்புதல் வேண்டும்.

## குற்றமான செயல்கள் :

விளக்குக்கும் ஒருவருக்கும் நடுவே ஊடறுத்துச் செல்லுதல், பிறர்மேல் படும்படி உமிழ்தல், பிறர் உடுத்த அழுக்காடையை அணிதல், பிறர்மீது தமது ஆடை படும்படி செல்லுதல், பலர் நடுவில் ஆடையை உதறுதல் முதலியன குற்றமாகும்,

பிறன் மனைவியை விரும்புதல், கள்ளுடித்தல், களவுசெய்தல், சூதாடுதல், கொலைசெய்தல் ஆகியவற்றை மனத்தாலும் நினைத்த லாகாது. இவைகள் பிறர் பழிப்பதற்கு இடமாவதோடு நரகத் திற்கும் ஏதுவாகும்.

பொய்பேசுதல், கோள் சொல்லுதல் பிறர் பொருளைக் கவர்தல், பொருமைப்படுதல் என்னும் இந்நான்கினையும் நாம் மனத்திலும் நினைத்தல் கூடாது. நினைப்பின், வறுமை எய்தி ஐயம் ( பிச்சை ) புகுவிக்கும்; நரகத்தில் செலுத்தும்; இறைவ னின் சீற்றத்திற்கு ஆளாக்கும்.

தமக்கென்று மட்டும் உணவு சமைக்க உலை ஏற்றுதல், நமக்கு உடல் நலம் பெருகும் என்று எண்ணி ஊன் உணவை உட்கொள்ளுதல், அடுக்களையில் ( சமையலறையில் ) எச்சிற்படுத் துதல் முதலியன கூடாது. மனை உறை தெய்வங்களுக்கு நிவே தனம் செய்த பின்னரே நாம் உணவு கொள்ளுதல் வேண்டும்.

சிறுவர்கள் உண்ணும் இடத்துப் பெரியவர்கள் உயர்ந்த பீடத்தில் இருத்தலும், அவர்கள் மனம் நோகும்படி ஏதாவது செய்தலும் ஆகாது. ஒருவர் கண்ணிற்கு மருந்தெழுதியகோலைத்

தூய்மை செய்யாமல், பிறர் கண்ணில் செலுத்துதலும், காலோடு கால் தேய்த்தலும் ஆகாது. புனிதமான பொருள் ஏதேனும் கிடைத்தால் அதனைத் தலையிலும், கண் முதலிய உறுப்புகளிலும் ஒற்றிக்கொள்ளுதல் வேண்டும்.

## கணவன் மனைவியர் உடனுறைவு :

ஆசாரக் கோவை என்னும் நூல் உண்ணல், உறங்கல், உடுத்தல், நடத்தல் முதலிய செய்திகளை மட்டும் அன்றி' வேறு சில நுட்பமான செய்திகளையும்கூட நமக்கு அறிவுறுத்துகின்றது. தொல்காப்பியம், இறையனார் களவியல் முதலிய பழந்தமிழ் இலக்கண நூல்களில் குறித்துள்ளபடி, கணவன் மனைவியர் உடன் உறைவு பற்றிய செய்திகளையும் நமக்குக் கூறுகின்றது. மனைவிக்கு மாதப்பூப்பு நிகழ்ந்தால், மூன்றுநாள் அளவும், அவளது முகத்தைக் கணவன் காணலாகாது. மூன்று நாளும் கழித்துத் தலை முழுகியபின், பன்னிரண்டுநாள் அளவும் மனைவியைக் கணவன் பிரிதலாகாது. உச்சிவேளை, நள்ளிரவு காலை, மாலை, சிவபிரானுக்குரிய திருவாதிரை, திருமாலுக்குரிய திருவோணம், அமாவாசை, பௌர்ணமி, அஷ்டமி, பிறந்தநாள் என்பனவற்றில் கணவன் மனைவியர் சேர்தல் ஆகாது.

அளத்தற் கருவியாகிய படியை மனைமேல் வைத்தலும், மனையைக் கவிழ்த்து வைத்தலும், புதிய ஆடையைத் தலைக்கடையில் விரித்தலும், தலைக்கடையில் கட்டிவிட்டுப் படுத்தலும் ஆகா. தம்மை அறியாதார் எதிரில் (விட்டுவாயிலில்) நிற்றல்நன்றன்று, திருமணப் பந்தலின்கீழ்த் துடைப்பம், செத்தை, பூவின் புற இதழ், பழைய கரிப்பானை, கிழிந்த கட்டில் என்னும் இவைகளைப் பரப்பலாகாது.

## குடும்ப நலம் :

தம்முடைய குடும்பம் செழித்துச் சிறக்கவேண்டும் என்று விரும்பாதவர்கள் எவரும் இலர். அவ்விருப்பம் நிறைவேறவும் ஆசாரக்கோவை நல்ல அறிவுரை வழங்குகின்றது. நாம் அதிகாலையில் துயில் எழுந்திருத்தல் வேண்டும். வீடு அழகாக இருக்கும்படி குப்பைமுதலியவற்றைப் போக்கித் தூய்மைசெய்து, பசுஞ்சாணத்தினால் வீட்டை மெழுகி, கோசலத்தை வீடு எங்கும் தெளித்து, பாத்திரங்களைக்கழுவி, நீர் முகந்து நிரப்புதற்குரிய சால்கரகம் முதலியவற்றைத் துப்புரவு செய்து, நீரை முகந்து நிரப்பி, அவற்றிற்கு மலர் அணிந்து, குடும்பம் செழிக்க வேண்டும் என்று இறைவனைத் தியானித்துக்கொண்டு அடுப்பினுள் நெருப்பிடுதல் வேண்டும். இவ்வாறு செய்தால் குடும்ப நலம் பெருகும்.

( தொடரும் )

# சிதம்பரம் - குகைமடம்
## —: கண்கட்டி :—
# ஸ்ரீ மறைஞான சம்பந்த நாயனர்

திருமுறைக் கலேஞர்
வித்துவான். திரு. தி. பட்டுச்சாமி ஓதுவார்

( மலர் 34, இதழ் 12, பக்கம் 551 இன் தொடர்ச்சி)

### சிதம்பரம் - குகைமடத்தில் வாசம் :

பல ஆண்டுகள் கழிந்து விட்டனவே, நமது திருக்களத்தி நகருக்குச் செல்வோம் என்று மறைஞானசம்பந்த தேசிகர் அவர்கள் கருதி இருந்தபோது, ஒருநாள் சிதம்பரம் ஆருத்திரா தரிசனம் செய்ய விரும்பினர். அப்போது குகைமடத்து அதிப ரான தம்பிரான் சுவாமிகளின் பேராதரவினல் சிதம்பரத்திலுள்ள குகைமடத்தில் சிலகாலம் தங்கிச் சுவாமி தரிசனம் செய்யக்கருதி, அவர்களின் அன்புரை லிகிதம் ஒன்று பெற்றுச் சிதம்பரம் சென்ருர்.

முன்னர், மறைஞானசம்பந்த தேசிகர் அவர்கள் சிதம்பரம் சிவாலயத்துள் திகழும் சிவகங்கைத் தீர்த்தத்தில் ஸ்நானம்செய்து சிவபூசாதிகளே முடித்து, ஸ்ரீ நடராசப் பெருமானைத் தரிசித்து வழிபாடு புரிந்து கொண்டு வடக்கு மாடவீதிக்கு வடபால் சிறிது தூரத்தில் தில்லே காளியம்மன் திருக்கோயிலுக்குச் செல்லும் வழி யிலுள்ள குகைமடத்துக்குச் சென்று, அங்கிருந்த அதிபரைக் கண்டுபேசி லிகிதம் அளித்து, அவர் விருப்பத்தின்பேரில் அக் குகைமடத்திலே ஒருபகுதியில் தங்கி இருந்து வரலானர்.

---

† இக்குகைமடம் வீரசைவக் கொள்கையுடைய குருநமச்சிவா யரால் ஏற்பட்டது. இவர் தம் குருவான, குகை, நமச்சிவாய மூர்த்திகளின் கட்டளைப்படி ஸ்ரீ நடராசப்பெருமான் ஆலயத் திருப்பணி புரியும் நிமித்தம் வந்து தங்கி இருத்தற்கு அமைத்த இடமே சிதம்பரம் - குகைமடம் எனப் பெயர் பெற்றது. இது

மறைஞானசம்பந்த தேசிகர் அவர்கள் சிலகாலம் சிறப்புறக் குகைமடத்தில் வாசம் செய்யும்போது, அக்குகைமடத்தைப் பரிபாலனம் செய்துவரும் அதிபர் இல்லாத காரணத்தினலோ? அல்லது வேறு எந்தக்காரணத்தினலோ? அறிதற்கில்லை. குகைமடத்தின் பரிபாலனம் இம் மறைஞானசம்பந்த தேசிகர்பால் வரலாயிற்று. குகைமடத்தின் பரிபாலனம்வந்தது முதல் அவர் சிதம்பரம் - குகைமடம் - மறைஞான சம்பந்தப் பண்டாரம் (தேசிகர்) எனப் பெயர் வழங்கப் பெற்ருர்.

" தில்லையில்

... ... ... ... ... ...
திருமால் அயன் இந் திரன் இமை யோரும்
அருமா மறையால் அடிபணிந் தேத்தப்
பானு கம்பன் பணிலமும் வாணன்
ஆன குடமுழவு ஆதியும் முழக்க
மாண்டகு மதுர வாய்மொழி இடமாய்த்
தாண்டவம் புரிவோன் சரண கமலம்
புந்தியில் நாளும் சிந்தனை பண்ணி
அப்பதி தன்னில் அருங்குகை மடத்தில்
எப்பதி யோரும் ஏத்தவும் இருந்தோன்
... ... ... ... ... ...
நண்ணிய தவமறை ஞானசம் பந்தன் —"

என்பது பதிபசுபாசப்பனுவல் - பாயிரம்.

குகை - மறை ஞானசம்பந்தப் பண்டாரம் அவர்களிடம் சிதம்பரத்திலுள்ள சைவ நன்மக்களும் பிறரும் பெருமதிப்பு, அன்பு, பக்தி முதலியன கொண்டு ஒழுகி வந்தனர். இவர்களிடம் வந்து வடமொழி நூல்கள், தென்மொழி நூல்கள், இலக்கணம், தருக்கம், சித்தாந்த சாஸ்திரம் முதலியவற்றைப் பாடங்கேட்டுத் தேர்ச்சியடைந்தவர் பலர். சிவதீட்சை, திருவைந்தெழுத்து உபதேசம், சிவபூசை பெற்றவர் பலர். இருமொழிக் கல்வியும் ஞானுபதேசமும் சைவத்துறவும் பெற்றுப் பேரறிஞராக விளங்கியவர்

---

சுமார் 700- ஆண்டுகளுக்கு முன் தோன்றியதாகத் திருச்சிராப்பள்ளி மாவட்டம், உடையார்பாளையம் வட்டம் இளங்கம்பூர் கிராமத்திலுள்ள ஒரு கல்வெட்டு சாசனம் கூறுகிறது. இளங்கம்பூர் கிராமம் சர்வமானியமாக - ஸ்ரீ நடராசப்பெருமான் பூசை முதலிய கட்டளைக்காக, குரு நமச்சிவாயரது மரபில் - வழியில் வந்த சிடர்களில் ஒருவர்க்கு உரியது எனச் சாசனம் கூறுகிறது.

பலர். அபிஷேகஸ்தர்களின் பிள்ளைகள் குருகுலவாசமாக உடனிருந்து சைவக்கிரியாக்கிரமம் முதலியவற்றைக் கற்றுத் தேர்ந்தவர் பலர்.

சிதம்பரத்தில் நடைபெறும் ஒரு மார்கழி ஆருத்திரா தரிசனத்தன்று தருமையாதீனத்து முதற் குரவர் ஸ்ரீ குருஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் ‡ அவர்கள் தம் சீடர்களுடன் ஸ்ரீ நடராசப் பெருமான் தரிசனத்திற்குச் சிதம்பரம் - ஆயிரக்கால் மண்டபத்திற்குக் காலையில் எழுந்தருளினார்கள். அப்பொழுது குகை - மறைஞானசம்பந்தப் பண்டாரம் அவர்களும் தரிசனத்திற்கு அங்குச் சென்றபோது தருமை ஆதீன முதல்வர் அவர்களைச் சந்தித்து அளவளாவி மகிழ்ந்ததாக ஒரு செய்தியை ஆன்றோர் கூறுவர். இந்நிகழ்ச்சி கி. பி. 16-ஆம் நூற்றுண்டின் இடைப்பகுதியின் இறுதி என்பர்.

குகை - மறை ஞானசம்பந்தப் பண்டாரம் அவர்களின் இருமொழிக் கல்வியின் வன்மை, ஒழுக்கசீலம், சைவத் துறவு, பேச்சுவன்மை முதலியன நாடெங்கும் பரவின; புகழ் ஓங்கியது. இவர்களிடம் வந்து கல்வி சிவதீட்சை, சைவத்துறவு பெற்றவர்கள், பலரில் மிகச் சிறந்த புகழுடன் விளங்கியவர்கள் சிதம்பரம் வேத

---

‡ இவர்கள் தென்பாண்டி நாட்டு ஸ்ரீ வில்லிபுத்தூரில் கார்காத்த சைவ வேளாளர் மரபில் தோன்றியவர்கள். மதுரைச் சொக்கலிங்கப் பெருமான் திருவருள் கொண்டு திருவாரூர் சென்று கமலை ஞானப்பிரகாசரது அருளுபதேசம் பெற்று ஸ்ரீ குருஞானசம்பந்தர் என்ற திருநாமத்தோடு மாயூரத்திற்கு கிழக்கே உள்ள தருமையம்பதியில் ஒருமடம் அமைத்துத் தம்மை அடுத்த சீடர்களுக்கு அருளுபதேசம் செய்யும் குருமூர்த்தியாக ஞானபீடத்தில் எழுந்தருளியவர்கள். ஒரு வைகாசி கிருஷ்ண பட்சம் சஷ்டி திதியில் ஞான சமாதி கைகூடப் பெற்றவர்கள். இவர்கள் அருளிய நூல்கள், சிவபோகசாரம், முத்தி நிச்சயம், சொக்கநாத வெண்பா, சொக்கநாதர் கலித்துறை, ஞானப்பிரகாச மாலை முதலியன. தற்போது இவர்களது ஞானபீடத்தில் எழுந்தருளி அருளாட்சிபுரிபவர்கள் 26-வது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் ஆவார்கள்.

ஞானமுனிவர் $ சீகாழி மறைஞான தேசிகர் * நெல்லைப்பதி தமிழாகர முனிவர் † என்ற மூவர் ஆவர்.

தமிழாகர முனிவர் தம் ஆசிரியரிடம் பயின்ற வேதஞான முனிவர் தொகுத்து எழுதிய வடமொழி-சைவாசௌ தீபிகையினைத் தமிழில் "ஆசௌ தீபிகை" என்ற பெயருடன் விருத்தப் பாவால் மொழி பெயர்த்தவர். பிரயாசித்த சமுச்சயம், நெல்லைக் காவலமாலை, திருப்பணிமாலை, கலைமகள் இரட்டைமலைமாலை, நீதிசாரம் முதலிய நூல்களையும் இயற்றியவர்; தமது முதிர்ந்த

---

$ வேதஞானமுனிவர்:- இவர் சிதம்பரத் தலத்தினர்; சுத்த சைவவேளாள மரபினர்; வடமொழி தென்மொழிகளை நன்கு கற்றவர்; குகை - மறைஞானசம்பந்தரின் அணுக்கத் தொண்டராக இருந்து வேதசிவாகமாதிகளைப் பயின்றவர்; அவர்களிடமே ஞானோபதேசமும் சைவத்துறவும் பூண்டு வேதஞானமுனிவர் என்ற பெயரும் பெற்றவர்; வடமொழியில், 'சைவாசௌச தீபிகை' என்ற ஒரு நூலை சிவாகமாதி மேற்கோளுடன் தொகுத்து எழுதியவர். காலம் கி. பி 16-ஆம் நூற்றுண்டின் இடைப்பகுதியின் இறுதியாகும். இவர் தொகுத்த வடமொழி - சைவ ஆசௌச தீபிகைக்குத் தமிழ் உரை யாழ்ப்பாணம்-நீர்வேலி, சா.சிவப்பிரகாச பண்டிதர் என்பவர் எழுதியுள்ளார். அந்நூல் சுமார் 60-ஆண்டுகளுக்கு முன் அச்சாகி வெளிவந்துள்ள அரிய நூல் ஆகும்.

* மறைஞானதேசிகர்:- இவர் சீகாழிப்பதியினர்; சுத்த சைவ வேளாளர் குலத்தினர்; சிலர் அந்தணர் குலத்தில் வந்தவர் என்பர். 64 வள்ளல்களுள் ஒருவரான ஆளவந்த வள்ளல் சந்தானத்தைச் சேர்ந்தவர்; குகை - மறைஞானசம்பந்தரிடம் வடமொழி தென்மொழி நூல்களைக் கற்றவர்; சைவ சீலமும் கல்விப்பெருக்கும் உடையவர்; குகை - மறைஞானசம்பந்தரிடமே ஞான தீட்சை, ஞானோபதேசம் பெற்றுச் சைவத்துறவும் பூண்டு, ஸ்ரீ மறைஞான தேசிகர் என்ற பெயரும் கொண்டவர்; சிவஞானசித்தியார்-சுபக்கம் என்ற நூலுக்கு விரிவுரை நன்கு வகுத்தவர்; பதிபசுபாசப் பனுவல் என்ற நூலுக்கும் உரை எழுதியவர்; பிற்காலத்தில் சிதம்பரம் - கண்கட்டி'மடத்திற்கு 2-வது அதிபராக விளங்கியவர்; கி. பி. 16-ஆம் நூற்றுண்டின் இறுதியிலும், கி. பி. 17-ஆம் நூற்றுண்டின் தொடக்கத்திலும் இருந்தவர் ஆவர்.

† தமிழாகர முனிவா:- இவர் திருநெல்வேலிப் பதியினர்; கார்காத்த சைவவேளாளர் மரபினர்; இளமையில் கி. பி. 16-ஆம் நூற்றுண்டில் இடைப்பகுதி இறுதியில் சிதம்பரம் வந்து குகை - மறைஞானசம்பந்தர் அவர்களிடம் சிவதீட்சைகளைப் பெற்று அணுக்கத்தொண்டராகப் பலகாலம் இருந்து, வடமொழி தென்

வயதில் (கி. பி. 1635க்கு மேல்) தம் ஆன்மானந்த வாதக் கொள்கையினை விடுத்துத் தருமையாதீனத்து 6-வது குருமகா சந்நிதானம் ஸ்ரீ திருஞானசம்பந்த தேசிகர் அவர்கள் நெல்லை - சிந்துபூந்துறையிலுள்ள மடாலயத்திற்கு எழுந்தருளியபோது, அங்குச் சென்று அக்குருமூர்த்திகளைத் தரிசித்து அவர்களிடமே ஞானோபதேசம் பெற்றுச் சைவசித்தாந்தக் கொள்கையுடையவராகித் தருமையாதீனத் திருக்கூட்டத்துத் தம்பிரான்களில் ஒருவராகப் பதிவு ஆனார். அக்காலம் கி. பி. 17-ஆம் நூற்றாண்டின் இடைப் பகுதி என்னலாம். தமிழாகரமுனிவர் தருமை ஆதீன அடியவராக ஆனகாலத்து, ஞானசம்பந்த குருராய அட்டகம், சந்திரகலாமாலை என்ற நூல்கள் இயற்றியுள்ளார்; இவர் சுமார் 90 வயதுக்கு மேல் இருந்தவர் ஆவர்.

குகை - மறைஞானசம்பந்த பண்டாரம் அவர்கள், குகை மடத்து நிர்வாகம் முதலியவற்றைப் பல ஆண்டுகள் இருந்து சிறப்புறக்கவனித்துவரும்போது, அவர் உலகில் இழி செயல்களைப் புரிந்து திரியும் மாந்தர்களையும் அவ்விழி செயல்களையும் தம் கண் கொண்டு பார்த்து வெறுப்பு, விருப்பு உற மனம் விரும்பாமல் - வெளியே செல்லாமல் தம் குகைமடத்துள் ஒரு பகுதியில் திரை போட்டுக்கொண்டு அங்கு உள்ளேயே இருந்துவரலானார் என்றும், தம் கண்களைத் துணியினால் இறுகக் கட்டிக்கொண்டு குகைமடத்துள்ளேயே இருந்துவரலானார் என்றும் பலர் பலவாறு கூறுவர். இவரது மாணவர்களில் ஒருவரான நெல்லைப்பதி, தமிழாகர முனிவர்,

"திங்கள் உரிஞ்சும் மணிமாடத் தில்லைக் குகையில் திரைபோட்டுப்
பங்க மறவாழ் மறைஞான சம்பந் தனும்நம் பதியாவர்"

என்று தாம் இயற்றிய பிராயச் சித்த சமுச்சயம் என்ற நூலில் கூறியுள்ளதையும் அறியலாம். இவர் தம் கண்களைக் கட்டிக்கொண்டு இருந்துவந்ததனால் கண்கட்டி - மறைஞானசம்பந்தப் பண்டாரம் என்ற பெயர் உலகில் வழங்கலாயிற்று. (தொடரும்)

---

மொழி நூல்கள் பலகற்று உணர்ந்தவர்; பின்பு அவர்களிடமே ஞானோபதேசமும் சைவத்துறவும் கொண்டு தமிழாகரமுனிவர் என்ற தீட்சா நாமம் பெற்றவர்; கி. பி. 17-ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் தமது நெல்லைப்பதி - அறச்சாலை மடத்திற்கு அதிபதியாக விளங்கியவர். (தற்போது நெல்லை நெல்லுமண்டித் தெருவிலுள்ள இந்த அறச்சாலை மடம் திருவண்ணாமலை ஆதீனத்திற்கு (குன்றக்குடிக்கு)ச் சொந்தமாக உள்ளது.) அப்போது தமது குருவின் ஆன்மானந்த வாதக் கொள்கையினைப் பரப்பி வந்தவர்.

# தேவார வைப்புத் தலங்கள்

## திருநாவுக்கரசர்

(மலர் 34. இதழ் 11. பக்கம் 509 - இன் தொடர்ச்சி)

[எண்கள் முறையே, திருமுறை-பதிகம்-பாடல்களைக் குறிப்பன.]

| | தலம் | பதிக எண் | இருப்பிடம் |
|---|---|---|---|
| 51 | குக்குடேச்சுரம் | 6-71-8 | சிற்றூர் மாவட்டம் புங்கனூரில் உள்ள 'திருக்கோழிச்சுரம்' என்ற கல்வெட்டில் குறிக்கப் பெற்ற தலமே இது என்பர். திரு. ரா. பி. சேதுப்பிள்ளை. |
| 52 | திருக்குணவாயில் | 6-71-6 | கொடுங்கோளூருக்கு மேற்கேயுள்ள குணவாயிற் கோட்டமென்னும் சேர நாட்டுத்தலம். |
| 53 | குமரி | 6-70-9 | கன்னியாகுமரி. |
| 54 | குயிலாலந்துறை | 6-71-11 | சிலம்பில் குறிக்கப்பெறும் 'குயிலாலுவம்' என்னும் வடநாட்டுத் தலமாதல் கூடும். |
| 55 | குன்றியூர் | 6-70-5 | மன்னார்குடிக்கு அருகிலுள்ள 'குன்னியூர்' என்னும் ஊராகலாம். |
| 56 | கூந்தலூர் | 6-70-9 | பேணு பெருந்துறைக்கு அருகிலுள்ள சிற்றூர். |
| 57 | கூழையூர் | 6-70-9 | விளங்கவில்லை, |
| 58 | கொங்கணம் | 6-70-5 | 'கொண்காணம்' என்னும் மலை புறநானூறு154, 56 ஆம் பாடல்களில் மோசிகீரனாரால் குறிக்கப்பெற்றுள்ளது. |
| 59 | கொங்கு | 6-70-9 | கொங்குநாடு, |

| | தலம் | பதிக எண் | இருப்பிடம் |
|---|---|---|---|
| 60 | கொடுமுடி | 6-70-3 | திருப்பாண்டிக் கொடுமுடி என்னும் பாடல்பெற்ற தலம் திருச்சிராப்பள்ளி மாவட்டத்தில் உள்ளது. |
| 61 | கொண்டல் | 6-51-9 | சீகாழிக்கு மேற்கே 3½ கல் தொலைவில் உள்ள சிற்றூர். |
| 62 | கொல்லிமலை | 5-34-1 | மேற்கு மலைத் தொடர்களில் ஒன்று. சேலத்திலிருந்து 30 கல் தொலைவில் உள்ளது. |
| 63 | கொல்லியறைப் [பள்ளி (அறப்பள்ளி) | 6-70-1 | கொல்லிமலையில் உள்ள சிவத்தளி. அறப்பளீஸ்வரர் சதகம் இத்தலத்து இறைவன் மேல் பாடப்பெற்றதே யாகும். |
| 64 | கோட்டுக்கா | 6-7-5 | நீர்சூழ்ந்த ஒரு பகுதியாகக்குறிக்கப்பட்டுள்ளது. இருப்பிடம் விளங்கவில்லை. |
| 65 | கோட்டுக்காடு | 6-70-5 | விளங்கவில்லை. |
| 66 | கோத்திட்டை | 6-70-3<br>6-71-2 | 'கோத்திட்டைக்குடி விரட்டானம்' என்றூர் அப்பர். அட்ட விரட்டத்துள் ஒன்றாகலாம். |
| 67 | கோவந்தபுத்தூர் | 5-71-3 | திருவிசயமங்கை என்னும் பாடல் பெற்ற தலம். கோவிந்த புத்தூர் என வழங்கும் சிற்றூர். |
| 68 | சடைமுடி | 6-70-3 | கோவிலடி எனவழங்கும் சிற்றூர். |
| 69 | சாலைக்குடி | 6-70-3 | விளங்கவில்லை. |
| 70 | சித்தவடம் | 4-2—3 | நம்பியாரூரர்க்குத் திருவடி சூட்டப்பெற்ற இடம். திருவதிகை விரட்டானத்தின் எல்லையில் உள்ளது. |

| தலம் | பதிக எண் | இருப்பிடம் |
|---|---|---|
| 71 சிவப்பள்ளி | 6-71-2 | மாயூரத்தை அடுத்த திருச்செம் பொன்பள்ளி என்னும் ஊரா கலாம் என்பர். ரா. பி. சே. |
| 72 சிரப்பள்ளி | 6-71-1 | திருச்சிராப்பள்ளி என்னும் பாடல் பெற்ற தலம். |
| 73 சூலமங்கலம் | 6-70-10 | பசுபதிகோயில் என்று தற்கா லத்து வழங்கும் சிற்றூர், |
| 74 செங்குன்றூர் | 6-70-5 | மலைநாட்டுத் தலம். செங்குன் றூர் தாலுக்காவின் தலையூர் விறல்மிண்ட நாயனர் பிறந்த தலம். |
| 75 செந்தில் | 6-23-4 | அறுபடை வீடுகளில் ஒன்றாகிய திருச்சீரலைவாய்என்னும் திருச் செந்தூர். |
| 76 செம்பாங்குடி | 6-7-3 | சீகாழிக்கு வடகிழக்கே 2 கல் தொலைவிலுள்ள சிற்றூர் என் பர் திரு. செங்கல்வராயபிள்ளை |
| 77 சேற்றூர் | 6-71-4 | திருவாரூர் - குடந்தைப் பேருந் துப் பாதையில் உள்ள திருச் சேறை என்னும் பாடல்பெற்ற தலம். |
| 78 சையமலை | 6-71-10 | விளங்கவில்லை. |
| 79 சோமேசம் சோமீச்சுரம் | 6-10-10 | கும்பகோணம் சோமநாதசுவாமி திருக்கோயில். |
| 80 ஞாழல்வாயில் | 6-71-7 | விளங்கவில்லை. |

(தொடரும்)

ஆதாரம்: பன்னிருதிருமுறை வரலாறு - முதற்பாகம்

திரு. க. வெள்ளைவாரணனர்.

தகவல்: இரா. செ.

தருமையாதீனம் 26 ஆவது குருமகாசந்நிதானம்



இன்றெமது நல்லிதழைப் புரந்துவரும் எம்முதல்வர்
மன்றுபுகழ்ச் சண்முகதேசிகருளின் திருத்தோற்றம்.

உ

குருபாதம்

திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனம்

26 ஆவது குருமகாசந்நிதானம்

## ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்

திருச்சி வானொலியில் திருமந்திரம் பற்றி வழங்கிய ஆசியுரையைக் கேட்ட அன்பர்களின்

# போற்றுதல் கடிதங்கள்

பவானி–638301.
24—11—75.

இன்றுகாலை குருமகாசந்நிதானம் அவர்கள் ரேடியோவில் பேசிய திருமூலர் பற்றிய அருளுரையைக் கேட்டேன். மிக்க மகிழ்ச்சி அடைந்தேன். ஒன்றே குலமும் ஒருவனே தேவனும் என்ற பதங்கட்கு விளக்கவுரை மிகமிக அருமையாக இருந்தது. ஜனாதிபதி முதல் கணக்கப்பிள்ளை வரை உதாரணத்திற்கு எடுத்துக்காட்டியதைக் கொள்முதல் செய்துகொண்டேன். அந்த விளக்கம் இமயம்போன்று இருந்தது. சிவபெருமானே முழுமுதல் தலைவன் என்ற கருத்து அமையப்பேசியது என்னை பரவசப்படுத்தியது

குருமகாசந்நிதானம் அவர்கள் அருளுரைகளை அடிக்கடி கேட்க விரும்புகிறேன்

மு. கண்ணப்பன்.

* * * *

தோப்புத்துறை,
24—11—75.

சுவாமிகளவர்களின் " திருமூலர் திருமந்திர விளக்கம் " வானொலிமூலம் கேட்டு எல்லையில்லா இன்பம் அடைந்தேன். சுவாமிகளின் தேனினும் இனிய குரலோசையும் எளிமை நிறைந்த விளக்கமும், சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் விரிவுரையும், என்போன்ற பாமரர்களும் எளிதில்

அறிந்து கொள்ளும் வண்ணமிருந்தன. சில வினடிகள் கேட்கவே மெய்ம்மறக்கும்நிலை ஏற்பட்டது என்ருல் சுவாமிகள் திருவாய் மலர்ந்தருளும் முழு விளக்கமும் செவிகள் கேட்குமாயின் "கள்ளப் புலனைந்தும்" தெளிவுற்று ஞானம் பெறும்!

வை நமசிவாயம்.

* * * *

கும்பகோணம்,
25—11—75.

கார்த்திகைச் சோமவாரத்தன்று திருமந்திரம் பற்றிய தங்கள் அருளுரையினை வானெலி வாயிலாகக் கேட்டேன். பொதுவும் சிறப்பும் பற்றிக் கூறிய விளக்கமும் சிவபரத்துவ அழுத்தமும் என் சிந்தையைக் குளிர்வித்தன. இதுபோல அடிக்கடித் திருமுறைகளைப் பற்றிய விளக்கங்களைத் திருவாய் மலர்ந்தருள வேண்டித் திருவடிகளில் விண்ணப்பித்துக் கொள்கின்றேன். வானெலி நிலையத்திற்கும் இத்தகு நிகழ்ச்சிகளை அடிக்கடி அமைக்க வேண்டுமென வேண்டுகோள் மடலும் விடுத்துள்ளேன்.

புலவர். வீ. ச. நடராசன்.

* * * *

சுவாமிமலை,
26—11—75

சுவாமிகள் திருவடிகளை வணங்கி வரைகின்றேன். இன்று காலை திருச்சி வானெலியில் "திருமந்திரம்" குறித்து ஆற்றிய உரை கேட்டு மகிழ்ந்தேன். "ஒருவனே தேவன்" என்பதற்கும் "ஈசனேடாயினும் ஆசை அறுமின்கள்" என்பதற்கும் கூறப்பட்ட விளக்கங்கள் உலகியலோடு ஒட்டி அற்புதமாக அமைந்திருந்தது. வானெலி மூலம் தவத்தந்தையவர்களது விரிவுரையைக் கேட்டு மகிழ்ந்த எனது மன நிறைவை இதன் மூலம் பணிந்து தெரிவித்துக்கொள்கின்றேன்.

இரா. அரங்கசாமி பி. எஸ்ஸி., பி. எல்.,
செயல் அலுவலர்
அருள்மிகு சுவாமிநாதசுவாமி திருக்கோயில்

களஞ்சேரி,
26—11—75.

ஸ்ரீலஸ்ரீ சந்நிதானம் அவர்கள் "ஒன்றே குலம் ஒருவனே தேவன்" என்ற பாடலுக்குச் சிறப்பாக விளக்கம் அருளியது இனிமையாக இருந்தது. சந்நிதானம் அவர்கள் 'உலகிற்கு எல்லாம் தேவன் ஒருவனே' என்பதை விளக்க, பரம்பொருள் ஒன்றென்றும் அதன் சக்திகள் பல உருவங்களிலிருந்து அரிய செயல்களைச் செய்கிறது என்றும் விளக்கி, அதைப் பாமரரும் உய்த்துணர இன்றைய நம் நாட்டு அரசியல் அமைப்பை உவமித்துக் கூறியது நன்றாக இருந்தது.

ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் இனிமையாக கேதாரகௌளை இராகத்தில் பாடியது மிகவும் ரம்யமாக இருந்தது. 'சிவனேடாயினும் ஆசை கூடாது' என்பதற்குச் சந்நிதானம் அவர்கள் விளக்கம் தந்தது எல்லோருக்கும் அறியாமை நீங்கியிருக்கும் என்று உணருகிறேன். ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம்அவர்கள் வேதங்களிலிருந்தும்,உபநிஷத்திலிருந்தும் வடமொழிச்சுலோகங்களை எடுத்துக்கூறி அருமையான கருத்துக்களை விளக்கியது என்னை மிகவும் கவர்ந்தது.

21—11—75.

ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் திருமூலதேவ நாயனாரின் 'திருமந்திரத்தைப்' பாமரரும் உணரும்படியும், அறிஞர்கள் போற்றிப் புகழ்ந்து தங்கள் அறிவைத் தெளிவு படுத்திக் கொள்ளும்படியும் விளக்கியது சிறப்பாக இருந்தது. சரியை கிரியை, யோகம், ஞானம், நான்கையும் விளக்கியது தெளிவாகவும், சுருக்கமாகவும் இருந்தது. மகாசந்நிதானம் அவர்கள், சமாதிபற்றித் தெளிவாக விளக்கி, அதன் புனிதத் தன்மையை உணரும்படி செய்ததோடு இல்லாமல் யாருக்குச் சமாதி வைக்கவேண்டும்; சமாதி வைத்துப் பூஜிக்கவேண்டும் என்று விளக்கியது அருமையாக இருந்தது.

ஒவ்வொரு தந்திரத்தையும் இனிமையாக விளக்கி வேதம் சிவாகமம் வெவ்வேறானது அன்று; அவை ஒன்றுதான் என்று விளக்கி, இந்த ஒன்றான தன்மையை அறிஞர்கள் மறுக்கமாட்டார்கள் என்றது உண்மையிலேயே ஆதிசைவ குருக்கள் குலத்தில் தோன்றிய எனக்கு மிகவும் மகிழ்ச்சியாக இருந்தது.

இதுபோல் அரிய கருத்துக்களைச் சந்நிதானம் திருவாய்மலர்ந்தருளி எங்களுக்கு நல்லாசி புரிய வேண்டுகின்றோம். இதுபோன்று ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் அருளுரையைச் செவிமடுக்கும் வாய்ப்பை அடிக்கடி ஏற்படுத்திக்கொடுக்க, திருச்சிராப்பள்ளி வானொலி நிலையத்தாரை வேண்டிக் கேட்டுக்கொண்டுள்ளேன்.

ச. கணேசன் எம். ஏ.,

* * * *

குத்தாலம்,
26—11—75.

"திருமந்திரம்" அருளுரையில், "ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்" என்பதைப் பல பெரியவர்கள், அரசு உயர் அதிகாரிகள் உள்ளிட்ட கூட்டத்தில் கேட்டோம். உண்மையிலேயே இதுகேட்க நாம் பெரும் புண்ணியம் செய்தவர்கள் என்ற பேச்சு பேசப்பட்டது என்பதனை மிகவும் அடக்கத்துடன் தெரிவித்துக்கொள்ளுகிறேன். பலமுறைகள் கேட்க வேண்டும் என்ற பேரவாவினால் நாம் உந்தப்பட்டுள்ளோம் என்று சொல்லியவண்ணம் சென்றார்கள்.

M. பாலச்சந்திரன்,
ஏஜண்ட்,
தினமணி, இந்தியன் எக்ஸ்பிரஸ்.

* * * *

ஒவர்ச்சேரி,
27—11—75.

திருச்சி வானொலியில் 'இலக்கியச் சோலை' பகுதியில் 'திருமந்திரம்' பற்றிச் செய்த அருள் வாக்கைக் கேட்கும் பேறு பெற்றேன். தாங்கள் மிகவும் விளக்கமாகவும் எளிமையாகவும் 'திருமந்திரம்' பற்றிச்செய்த சொற்பொழிவு என்னைப்போன்றவர்களுக்குத் 'திருமந்திரம்' என்னும் நூலைப் படிக்கவேண்டும் என்ற ஆவலை உண்டாக்கியுள்ளது.

சிறப்பாக 26—11—75 அன்று தாங்கள் தங்கள் விளக்க உரையில் 'ஈசனோடாயினும் ஆசை அறுமின்' என்பதற்குக்

கொடுத்த விளக்கம் மிகவும் மிகவும் போற்றத் தக்கது. தாங்கள் வானொலியில் தொடர்ந்து செய்த விளக்கத்தைச் சிறுவெளியீடாக அச்சிட்டு வழங்க வேண்டுமாய்ப் பணிவுடன் கேட்டுக் கொள்கிறேன்.

எஸ். சோமசுந்தர முதலியார்,
தலைமை ஆசிரியர்.

* * * *

ஆனந்ததாண்டவபுரம்,
29—11—75

காரணம்பற்றி ஏற்படும் நிலையில்லாத அன்பு சிவமாகாது என்பதையும், அதுவே ஆண்டவனிடத்தில் வைக்கப்படும் போது சாசுவதமாக ஆகிவிடுவதால் சிவமாகி விடுகிறது என்பதையும் தெளிவாக - சுருக்கமாகக் கூறிய முறையில் மனம் லயித்துவிட்டது

இன்னருள் அம்பாள் என்றது மிகப் பொருத்தம். "தயா மூர்த்தி" என்ற லலிதா ஸஹஸ்ரநாமமும், "தேசிக ரூபேண தர்சிதாப்யுதயாம்" (குருவின் உருவில் வந்து அருள்புரிபவள்) என்ற ஆன்றோர் வாக்கும் ஸ்ரீ வைஷ்ணவ சம்பிரதாயத்தில் அம்பாளை "புருடாகாரம்" என்ற சொல்லில் ஜீவர்கள் கடைத்தேற சிபாரிசுசெய்யும் தேவதையாகப் பாவிக்கும் சித்தாந்தமும் ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் உரை நிகழ்த்தும்போது நினைவுக்கு வந்தன.

இனிமையானஸங்கீதம் - கருத்துக்கள் நிறைந்த - ரத்ன சுருக்கமான அருள்வாக்கு, விரிவான பேச்சு நிறைய கேட்டு ரஸித்திருக்கிறேன். ரத்னசுருக்கமாகவும் தெளிவுகுன்றாமலும் பேசுவார்கள் என்பது பலருக்கு இப்பொழுதுதான் புரியும்.

P. ராமதாஸ் அய்யர்.

* * * *

தேவிகாபுரம்,
29—11—75.

கடந்தநான்கு நாட்களாகத் திருச்சிவானொலி வழியாகத் திருமந்திரச் சொற்பொழிவாற்றி மெய்யன்பர்களைப் பக்தி

வெள்ளத்தில் மூழ்கச் செய்து பேரின்பம் அடையச் செய்த தேவரீரின் எளிவந்த திறம் போற்றுதற்குரியது.

இன்று "ஒன்றவன் தானே", "அன்பும் சிவமும்", "வாழ்கவே வாழ்க" என்னும் முதற்குறிப்புடைய திருமந்திர மாலைகட்கு விரிவுரைசெய்த திறம் தேவரீருக்கு இயல்பாக அமைந்துள்ள தெய்வீகத் திருவருளின் ஆற்றலையும் செவிக்கும் சிந்தைக்கும் தெவிட்டாத இன்னிசைச் சிறப்பையும் சிந்தனை ஆற்றலையும் வெளிப்படுத்தின என்பதை எண்ணி எண்ணி இறும்பூதெய்துகின்றேன்.

தேவரீர் நிகழ்த்தியருளிய சொற்பொழிவைச் சற்று விரிவாக்கி 'ஞானசம்பந்தம்', 'குமாரகுருபரன்' ஆகிய இதழ்களில் வெளியிடும்படி அருள்பாலிப்பின், சைவ உலகம் படித்துப் பேரின்பம் அடையும்.

நா. சீனிவாசன்,
தமிழாசிரியர்.

* * * *

காரைக்கால்,
29 - 11 - 75.

சுவாமிகளின், திருமந்திரப் பேச்சு வானொலியில் கேட்டேன். கேட்டதன் மூலம் யான் மிக்க நற்பேறுடையவன் என்பதை உணரலானேன். பேச்சு, ஆழம் அமைதி, அழகுகள் பொருந்தி ஒரு தெய்வீகக் கவிதையைக் கேட்பது போலும் நிறைவை அளித்தது. அரிய கருத்துக்களை எளிய முறையில் சொல்லப் புலவர் உலகுக்கு அஃது வழிகாட்டியாகும் என்பதில் தடையில்லை. இசையும் கூடியதால், பக்திப் பேச்சு பரிபூரணத் துவம் அடைந்து கேட்பாரை நல்லுணர்வில் உய்க்கிறது.

சுவாமிகள் ஒருமணி நேர விரிவுரை வானொலியில் வழங்கித் தமிழுலகைப் பயன்பெறச் செய்ய வேண்டும் என்பது என் பிரார்த்தனை.

புலவர், கோ. சாரங்கபாணி.

புதுக்கோட்டை,
29—11—75

சில நாட்களாக மகாசந்நிதானம் அவர்கள் வானொலியில் "திருமந்திரம்"பற்றிப் பேசியதைக்கேட்கும் பாக்கியம்கிடைத்து ஆனந்த பரவசமானேன். அந்த மந்திரங்கள் சிலவற்றை சந்நிதானமவர்கள் இனிய எளிய நடையில் வானொலியில் பேசியது பொதுவாகத் தமிழர்களும் சிறப்பாகச் சைவர்களும் செய்த பெரும்பாக்கியம். அந்தசிலநாள் வானொலிப்பேச்சைப் புத்தக வடிவில் ஆதீன வெளியீடாக வெளியிட்டால் தமிழுலகம் பயனடையும்.

PL சுந்தரேசன்.
நிர்வாகி
பழனிரத்னம் கம்பெனி.

• • • •

அண்ணாமலைப்பல்கலைக்கழகம்,
29—11—75.

திருமூலர் நெறிவிளக்கம் தன்னை யின்று
திகழுயிர்கள் கடைத்தேற விளக்கிக் காட்டி
ஒருநெறிய தமிழ்ஞான சம்பந் தன்ருள்
உலவாத நலக்கிழியா யுலகுக் கீந்து
திருவாரும் குருவருளைச் செகத்துக் கீந்து
திகழ்ஜகத்துக் குருவெனவே நின்று காக்கும்
பொருவரிய தவஞானி தருமை மேவும்
புண்ணியத்தின் புண்ணியமே நின்தாள் போற்றி.

குருமகாசந்நிதானம் வானொலியில் உலகமக்கள் உய்வான் வேண்டி நிகழ்த்தியருளிய நெறி விளக்கத்தில் திருமூலர் பாசுரங்களுக்கு வழங்கியருளிய நுட்பவுரையாம் உண்மையுரை கேட்டுப் பெருமகிழ் வெய்தினேன். 'ஒன்றே குலம்' என் பதற்குப் பசுக்குலம் எனவும் ஒருவனே தேவன் என்பதற்கு இக்கால ஆட்சி முறையை எடுத்துக்காட்டி விளக்கியருளிய நுட்பமும் எம்மை ஆட்கொள்ளும் தவப்பெருக்கால் விளைந் தவை. அவ்விடம் குருமகாசந்நிதானம் சீலம் நிறை நல்லொழுக்கத் தவநிறைவினாலேயே தவயோகியின் திருவுள்ளக் கருத்தைவாங்கி, எப்போன்றூர்க்கு வழங்கியருள முடியும்.

தவவொழுக்கத்துக்கும் அருள்ஞான விளக்கத்துக்கும் நிறைகுடமாக விளங்கும் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் திங்களுக்கு ஒரு ஞாயிறு அல்லது இரண்டு ஞாயிறு, திருமேனி செவ்விக்குகந்த வேளையில் ஒருமணி நேரம் திருமந்திரப் பாடல் விளக்கத்தைப் பாடமாக வழங்கியருளின் என் போன்ருர் உணர்ந்து தெளிய வாய்ப்பாம். அவ்விடம் குருமகா சந்நிதானத்தைப் பன்முறையும் நமஸ்கரித்து வேண்டுகிறேன்.

டாக்டர். வை. இரத்தினசபாபதி எம். ஏ. பி, எச்டி.
தத்துவத்துறை.

* * * *

மேலப்பாதி (அஞ்) 609304
3—12—75

24—11—75, 26—11—75 29-11—75 (திங்கள், புதன், சனி) ஆகிய தேதிகளில் திருச்சி வானெலி நிலைய இலக்கியச் சோலை நிகழ்ச்சியில் தங்களின் "திருமந்திரம்" ஆய்வுரையைக் கேட்கும்பேறு பெற்றேன். என் உள்ளம் அடைந்த மகிழ்வும் தெளிவும் செவிபெற்ற கேள்விச் செல்வமும் சொல்லுந்தரமன்று. "ஒன்றே குலமும ஒருவனே தேவனும்" என்ற பாடலுக்குத் தாங்கள் தந்த விளக்கத்தால் இறைவனைப் பற்றியும் சமயத்தைப்பற்றியும் என் சிந்தையிற்றேங்கியிருந்த குழப்பநிலை நீங்கித் தெளிவுபெற்றேன். ஒருவனே தேவன் என்பதற்கு நாத்திகவாதத்தினரால் இதுகாறும் பரப்பப் பெற்றுவந்த தவருன கருத்துக்கள் ஒதுக்கத்தக்கன என்பதைச் "சிவனோடு ஒக்குந் தெய்வமுமில்லை" என்ற திருமூலர் வாக்கைச் சிந்திக்கத் தங்களது ஆய்வுரை பெரிதும் பயன் பட்டது. இத்தகைய அறிவுரைகளை அடிக்கடி நாட்டு மக்களுக்கு வழங்கிவரவேண்டுகிறேன்.

சு. பாலகிருஷ்ணன்,
செயலர், திரு. வி. க. நூல்நிலையம்.

* * * *

திருபுவனம்,
5—12—75.

சுவாமிகள் அவர்கள் கடந்தவாரம் வானெலியில் திருமந்திரத்திற்கு விளக்கமளித்து நிகழ்த்தியருளிய சொற்பெருக்

கைச் செவிமடுக்கும் பேறு பெற்று வியந்து நின்றேன். இவ் வளவருமையான விளக்கம்-பொருள் விளக்கம்-உட்பொருள் விளக்கம் தங்களைப்போன்ற மகான்கள்தான் வழங்கியருள இயலும்.

அதிலும் 'ஒருவனே தேவன்' என்றமைக்குத் தேவரீர் அவர்கள் தற்கால அரசினை ஒப்புநோக்கி வழங்கிய விளக்கம். இந்து (சைவ) சமய இறைவழிபாட்டின் - பல தெய்வ வழி பாட்டின் சிறப்பைச் சிறப்பாக விளக்குவதாயமைந்தது.

ஜனாதிபதி, பிரதமர் முதல்வர்கள், மற்றவர்கள், அதிகாரி கள் உள்ளதுபோன்று மூலவர் ஒருவரே. மற்றவர்களும் உள்ளனர் என்ற தங்களின் விளக்கவுரை, திருமூலரின் 'ஒருவனே தேவன்' என்ற வாக்கிற்கு பாமரத்தனமாக எல்லோரும் உணரும் பொருளையே உணர்ந்துவந்த அடியே னுக்குத் தங்களின் அருள்விளக்கம் புதிய உணர்வைத்தந்தது.

நமது தமிழ்மறைகளிலும், தேவார திருவாசகங்களிலும், சித்தர் பாடல்களிலும் உள்ள சில பாடல்களுக்குச் சிலர், ஏன்? நாத்திகர்கள்கூட, பலவாருகத் திரித்துப் பொருள்கூறி மக்க ளைத் திசை திருப்பிவிடுகிருர்கள்.

அவற்றின் உண்மைக் கருப்பொருளை மகாசந்நிதானம் அவர்கள் உலகம் உணர்ந்துய்ய அடிக்கடி வழங்கியருளி, (நூல் வடிவத்திலேனும்) அனைவரையும் பாலித்திட அருள் புரிய நமஸ்கரித்து வேண்டுகிறேன்.

வை குஞ்சிதபாதம்.

* * * *

ஜெயங்கொண்டம்'
26—11—75.

தங்கள் அருளுரைகளை 24—11—75 முதல் 26—11—75 வரை திருச்சி வானொலி வாயிலாகக்கேட்டு இன்புறும் வாய்ப்பு இறையருளால் எளியேனுக்குக் கிட்டியது.

24—11—75 அன்று வேத - ஆகம உபநிஷத்துகளை, திருமந்திரக் குறிப்புகளிலிருந்து எடுத்துக்காட்டி ஆய்வுரை வழங்கிய போழ்து புளகாங்கிதம் அடைந்தேன். 26—11—75 காலை ஒன்றே குலம் ஒருவனே தேவன் என்ற திருமந்திரங்

களுக்குத் தாங்கள் (மகாசந்நிதானம் அவர்கள்) வழங்கிய - பிறப்பு குறித்தும் அதன் சிறப்பு வேறு என்பதனையும் விளக்கி, சிலர் கூறும் மூடப்பழக்கம் எனும் கூற்றுக்குச் சரியான விடை கூறி விளக்கம் தந்தும் பிறகு, ஒருவனே தேவன் என்பதற்கு தற்கால - மற்ற பகுத்தறிவாளர்களும் - சீர்திருத்தச் செம்மல் களும் நன்கு புரிந்துகொள்ளும் வண்ணம் நமது நாட்டு ஆட்சிமுறையையே உதாரணம் காட்டி, விளக்கிய முறைகளை யும் கேட்டபோது எளியேனால் பாராட்டாமல் எப்படி இருக்க இயலும் ? புலவர் பெருமகனாராகிய மகாசந்நிதானம் எங்கே ! ஏதுமறியாத யான் எங்கே ! ஆயினும் வானொலியில் ஆய்வுரை கேட்டு என்னால் இதை எழுதாமல் இருக்க இயலவில்லை.

மற்றும், யாவர்க்குமாம் இறைவர்க்கு ஒரு பச்சிலை. என்ற சிலபூசை முறைகளையும், இனிய சொல் பேசவேண்டியதை யும், இன்சொல் இறைவன் கொடுத்திருக்க வன்சொல் ஏன் ? என்னும் பொருள்பட தாங்கள் நாட்டு மக்களுக்கு வழங்கிய அருளுரையும் என்றும் என் மனதில் நிலைத்திருக்கும்

தங்களைத் தவிர யாரால் இப்படி இனியசொல் இயம்ப இயலும்? இந்த இனிய வாய்ப்பினை அளித்த திருச்சி வானொலி நிலையத்தார்களுக்கு என் நன்றியும் ஆசிகளும் மகாசந்நிதானம் அவர்கள் மூலமே வழங்கக் கடமைப்பட்டுள்ளேன்.

ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் மேன்மேலும் சைவத் தொண்டு - சமயத் தொண்டு - தமிழ்த் தொண்டுகள் பல செய்து நமது சமய நெறிகளை நன்கு யாவரும் உணரும் வண்ணம் பரப்பி எளியவர்கள் துயர்துடைத்து இன்றுபோல் என்றும் பல்லாண்டு பல்லாண்டு அருள் பழுத்த பழமாக சமய குரவராக வாழ எல்லாம் வல்ல பரம்பொருளை வழுத்தும்,

வி. கு. இராமமூர்த்தி குருக்கள்.

திருச்சிராப்பள்ளி வானொலி நிலையத்திலிருந்து வந்து திருமந்திரம் பற்றிய ஆசியுரைகளைப் பதிவு செய்தபோது தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களைத் தரிசித்து

**திரு. இராகவன் அவர்கள் வாசித்தளித்த போற்றிப்பாமாலை**

திருச்சி,
19—11—75.

தருமைஆ தீனஉயர் சற்குருவே எங்கள்
அருமைத் தமிழ்க்கோர் அரசே! - திருமந்த்ரம்
தன்னைப் பதிவுசெய்து தாரணிக் கேபரப்ப
என்னை அனுப்பிவைத்தார் இங்கு.

முத்துக் குமரனும் முத்தமிழும் பெற்றுவந்த
பத்திக் கனியே பரஞ்சுடரே - நத்தியெனை
சேக்கிழார் என்று திருவருள் பாலித்த
வாக்கினுல் ஈந்தருள்வீர் வாழ்த்து

தெய்வ மணங்கமழும் செம்மணியே சந்நிதியே
சைவம் தழைக்கத் தமிழ்தழைக்க - வையகத்தில்
விண்கண்ட தெய்வமென வீற்றருளும் ஞானகுரு
கண்கண்ட தெய்வமே காப்பு.

நெஞ்செலாம் செந்தமிழே ! நேயமுடன் ஓதுகின்ற
அஞ்செழுத் துங்கள் அணிகலமே - செஞ்சொலார்
வேதம் பொருள்கண்ட மெய்ஞ்ஞான மாமுனியே
பாதம் தொழுதோம் பணிந்து.

என். இராகவன்.

---

( 44 ஆம் பக்கத் தொடர்ச்சி )

இறைவன் திருப்பெயர் – ஸ்ரீ சுந்தரேசுவரர். இறைவி திருப்பெயர் – ஸ்ரீ அழகம்மை. பராசர முனிவர் வழிபட்டு அருள் நலங்கள் பெற்ற சிறப்புடையது.

கிழக்கு நோக்கிய சந்நிதி. தீர்த்தம் – அம்புவிதீர்த்தம். இக்கோயிலில் ஸ்ரீ வில்வவனேசுவரர் ஸ்ரீ அகிலாண்டேஸ்வரியுடன் எழுந்தருளியுள்ள ஒரு தனிக் கோயிலும் உளது. சோமாஸ்கந்தர் அம்பாள் திருவுருவங்கள் உள்ளன. கடலில் கண்டெடுத்ததாகக் கூறப்பெறும் நவராத்திரி அம்பாள் விக்கிரகம் உள்ளது. 1954 இல் அஷ்டபந்தன மகாகும்பாபிஷேகம் நடைபெற்றுளது.

# திருக்கலிக்காமூர்த் தலச் சிறப்பு

தென்னாடு சிவமணம் கமழும் திருநாடு. எண்ணற்ற திருக்கோயில்கள் இந்நாட்டைக் கடவுள் மணம் கமழச் செய்கின்றன. பாடல் பெற்ற சிவதலங்களும் வைப்புத் தலங்களும் பிற தலங்களுமாய் விளங்கும் கோயில்கள் மக்களுக்குப் பக்தி உணர்வை வளர்த்து அவர்களுக்கு உய்யும் நெறி காட்டி விளங்குகின்றன. தமிழகத்தில் காவிரியின் இருகரை மருங்கிலும் விளங்கும் சிவாலயங்களே மிகவும் அதிகம். கங்கையிற் புனிதமாய காவிரிக்கரைத் தலங்கள் அருள் நலம்மிக்கவை. திருவாஞ்சியத் தல புராணத்தில்,

" கங்கையங் கரை நாள் மூன்றும் கௌதமை யமுனை யாதி
அங்கதன் கரை நாள் ஐந்தும் அமைந்துளார்க்கு எய்தும் [ பேற்றில்
பொங்குகா விரிமருங்கில் போயொரு கணப்போ தேனும்
தங்குவார்க் குரிய பேறே தலைமையாய்ச் சாற்றும் நூல்கள். "

" என்று கூடிய பதிகள்மற் றனவில எய்தித்
துன்று காவிரி மருங்கெலாம் துறக்கமே நிகர்க்கும்
மன்றல் சேரதன் கரையின் நுண் மணலெலாம் இலிங்கம்
நின்ற கோவின் வண்குளப்படி நீரெலாம் தீர்த்தம் "

என்று காவிரியின் சிறப்பும் காவிரிக்கரைத் தலச் சிறப்பும் கூறப் பெறுகிறது.

சோழவள நாட்டில் காவிரியின் வடகரையில் திருவெண்காட்டிற்கு அண்மையில் கடற்கரையை அடுத்து அன்னப்பன்பேட்டை என வழங்கும் கலிக்காமூர் என்னும் இத்தலம் விளங்குகிறது. சீகாழி பேருந்து நிலையத்திலிருந்து திருவெண்காடு செல்லும் பேருந்துகளில் மங்கைமடம் என்னும் இடத்தில் இறங்கிச் செல்லலாம். இரண்டுகல் தொலைவு இருக்கும். பாடல் பெற்ற சிவ தலங்களில் எட்டாவது தலம் இது. திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் அருளிய தேவாரத் திருப்பதிகம் ஒன்றினைப் பெற்றுத் திகழ்வது. திருஞானசம்பந்தர் இத்தலத் தேவாரப் பதிகத்துள் கலிக்காமூர் இறைவனை வழிபடுவார்க்கு வினைகள் அகலும்; நோய்கள் நீங்கும்; செல்வப் பெருக்கம் உண்டாகும் என்று பாடல்கள்தோறும் பயன் அருளிச் செய்கின்றார்

( தொடர்ச்சி பக்கம் 43 பார்க்க )

# செய்திகள்

மாயூரம் – வள்ளலார்கோயிலில்

## துலாமகோற்சவம்

திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனத்திற்குச் சொந்த மான உத்தரமாயூரம் – வள்ளலார்கோயில் ஸ்ரீ வதான்யேசுவர சுவாமி திருக்கோயிலில் துலாமகோற்சவம் சிறப்பாக நடை பெற்றது.

18—10—75 சனிக்கிழமை ஸ்ரீஞானம்பிகை உடனுறை ஸ்ரீவதான் யேசுவரசுவாமி இடபவாகனத்தில் எழுந்தருளி காவிரியில் துலா மாதப் பிறப்புத் தீர்த்தம் கொடுத்தருளலும், 3—11—75 திங்கட் கிழமையன்று, ஸ்ரீ மேதா தக்ஷிணாமூர்த்தி வெள்ளி கைலாச வாகனத்திலும், ஸ்ரீ கங்கையம்மன் மகர வாகனத்திலும் எழுந் தருளி, துலாமாச, சோமவார அமாவாசை தீர்த்தங்கொடுத் தருளலும் நிகழ்ந்தன. 19—10—75 முதல் 7—11—75 முடிய உள்ள நாட்களில் சந்திரசேகரர் உற்சவம் நடைபெற்றது.

7—11—75 வெள்ளிக்கிழமை ஸ்ரீ ஞானம்பிகை உடனுறை ஸ்ரீவதான்யேசுவரசுவாமி மகத்துவஜாரோகணமும், 11—11—75 செவ்வாய்க்கிழமை சகோபுரதரிசனமும், 13—11—75 வியாழக் கிழமை திருக்கல்யாணமும், 15—11—75 சனிக்கிழமை திருத்தேர்த் திருவிழாவும், 16—11—75 ஞாயிற்றுக்கிழமை பகல் 12 மணி அளவில் காவிரியில் – இடபதீர்த்தத்தில் – ( கடைமுழுக்கு ) தீர்த்தங்கொடுத்தருளலும் நிகழ்ந்தன. ஆயிரக்கணக்கான பக்தர் கள் தீர்த்தத் திருவிழாவில் பங்குபற்றிப் பயன்பெற்றனர்.

## கந்தசஷ்டி விழா

வேலூரில் :

திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனத்திற்குச் சொந்த மான வேலூர் ஸ்ரீ வைத்தியநாதசுவாமி தேவஸ்தானத்தில் கந்த சஷ்டித் திருவிழா 4—11—75 முதல் தொடங்கி நடைபெற்றது, 9—11—75 ஞாயிற்றுக்கிழமையன்று ஸ்ரீ செல்வமுத்துக்குமார சுவாமி ஸ்ரீ பாலாம்பிகை உடனுறை ஸ்ரீ வைத்தியநாதசுவாமியிடம்

வேல் பெறுதலும், சூரனைச் சம்கரித்தலும், மயில் வாகனத்தில் ஸ்ரீ செல்வமுத்துக்குமாரப்பெருமான் காட்சிவழங்குதலும் நிகழ்ந்தன. 11—11—75 செவ்வாய்க்கிழமை ஸ்ரீ தெய்வயானையம்மை திருமணமும், 12—11—75புதன்கிழமை ஸ்ரீவள்ளியம்மை திருமணமும், 13—11—75 வியாழக்கிழமை ஸ்ரீ வள்ளி, தெய்வயானை உடனுய ஸ்ரீ செல்வமுத்துக்குமாரப்பெருமான் வெள்ளி ரதத்தில் வலம் வருதலும் சிறப்பாக நடைபெற்றன. விழா நாட்களில் விசேஷ நாதசுர இன்னிசை முதலிய நிகழ்ச்சிகள் நடைபெற்றன.

4—11—75 முதல் 13—11—75 வரை உள்ள விழாநாட்களில் நாள்தோறும் மாலை 6 மணி முதல் பிரசங்க சபா மண்டபத்தில் கந்தபுராண விரிவுரை, சென்னை, சுயப்பாக்கம், திரு. சோம சுந்தரம் செட்டியார் அவர்களால் நிகழ்த்தப்பெற்றது. கந்த விரதம் மேற்கொண்டு ஸ்ரீ செல்வமுத்துக்குமார சுவாமியை வழிபடும் பக்தர்களும் பிறரும் கேட்டு மகிழ்ந்தனர்.

## மாயூரம் - குமரக்கட்டளையில் :

திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனத்திற்குச் சொந்தமான மாயூரம் - குமரக்கட்டளை ஸ்ரீ சுப்பிரமணியசுவாமி தேவஸ்தானத்தில் கந்த சஷ்டி விழா 4—11—75 செவ்வாய்க்கிழமைமுதல் தொடங்கி நடைபெற்றது. நாள்தோறும் காலை மாலை இருவேளைகளிலும் ஸ்ரீசுப்பிரமணியப்பெருமான்திருவீதியுலாவும், 9—11—75 ஞாயிற்றுக்கிழமை சூரசம்காரமும், ஸ்ரீ சுப்பிரமணியப்பெருமான் ஸ்ரீ வள்ளி, தேவசேன சமேதராகக் காட்சி கொடுத்தருளலும், 10—11—75 திங்கட்கிழமை திருத்தேர்த் திருவிழாவும் சிறப்பாக நடைபெற்றன. முருக பக்தர்கள் நாள்தோறும் வந்து வழிபட்டு உய்ந்தனர்.

கந்தசஷ்டி விழாவை முன்னிட்டு ஸ்ரீ சுப்பிரமணியசுவாமிக்கு 26—10—75 ஞாயிற்றுக்கிழமை சஷ்டியில் தொடங்கி சகஸ்ரநாம அர்ச்சனைரூபமாக லக்ஷார்ச்சனை நடைபெற்றது. லக்ஷார்ச்சனை 9—11—75 ஞாயிற்றுக்கிழமை கந்தசஷ்டியன்று நிறைவுற்றது. அன்பர்கள் பலர் பங்குபற்றி முருகப்பெருமான் திருவருளுக்கு உரியவராயினர்.

## சென்னை, தருமையாதீன சமயப் பிரசார நிலையத்தில் கந்தசஷ்டி விழா

சென்னை, தருமையாதீன சமயப் பிரசார நிலையத்தில் கந்த சஷ்டி விழா, 4—11—75 செவ்வாய்க்கிழமை முதல் சிறப்பாக

நடைபெற்றது. ஸ்ரீ செல்வ முத்துக்குமார சுவாமி திருவுருவப் படத்திற்கு அருச்சனைகள் செய்து வழிபாடு இயற்றப்பெற்றது. திருப்புகழ், கந்தரனுபூதி, பிள்ளைத்தமிழ்ப்பாடல்கள் திரு. ஞானப்பிரகாசம் திரு N. இராமலிங்கம் ஆகியோரால் இன்னிசையுடன் பாடப்பெற்றன. 4-11-75 அன்று சென்னை உயர் நீதிமன்ற நீதிபதி. திரு. S. சூரியமூர்த்தி அவர்கள் தலைமையில் விழா நிகழ்ந்தது. "ஒவ்வொருவரும் முருக வழிபாட்டில் நம்பிக்கையோடு தன்னை அர்ப்பணித்துக் கொண்டால் வாழ்க்கையில் ஏற்படும் இடையூறுகளை எல்லாம் கடந்துசெல்ல முடியும்" என்று தலைமையுரையில் குறிப்பிட்டார்கள்.

5—11—75 அன்று சென்னை உயர் நீதிமன்ற நீதிபதி கனம். திரு. T. ராமபிரசாதராவ் அவர்கள் தலைமையில் விழா நிகழ்ந்தது. "முருகப்பெருமான் அதர்மத்தை ஒழித்து தர்மத்தை நிலைநாட்ட அவதாரம்செய்தார்" என்று தலைமையுரையின் போது கூறினர்கள். 6—11—75 அன்று டாக்டர். திரு. ரத்னவேல் சுப்பிரமணியம் அவர்கள் தலைமையில் விழா நிகழ்ந்தது. "ஆண்டவனை நாம் தவறாது வழிபட்டால் அவன் நமது வேண்டுகோளை நிறைவேற்றுவான்" என்று தலைவர் அவர்கள் தெரிவித்தார்கள். 7—11—75 அன்றைய விழாவிற்கு பைந்தமிழ்ச்செல்வர் திரு. S. சிவகுமாரன் M A. அவர்கள் தலைமையமர்ந்து "கந்தபுராணம் உயிர்வளர்ச்சிக்கும் உளவளர்ச்சிக்கும் போற்றப் பெறுவது" என்று மொழிந்தார்கள். 8—11—75 அன்று செந்தமிழ்க்கலைச் செல்வர், திரு. பெரியசாமித்தூரன் அவர்கள் தலைமையில் விழா நடைபெற்றது. "மனதை ஒருநிலைப்படுத்தி இசையோடு பாடினல் ஆண்டவனை அடையமுடியும். சமயாசாரியர் இசை மூலமாக சமயத்தையும் தமிழையும் வளர்த்தார்கள்" என்று உரையாற்றினர்கள். 9—11—75 அன்று விரிவுரை வித்தகர் திரு. முத்து அடிகள் தலைமையில் விழா நிகழ்ந்தது. நாள்தோறும் திரு. சுப்பிரம்மம் அவர்கள் பார்வதிகல்யாணம், முருகன் திரு அவதாரம், பிரணவஉபதேசம், தாரகாசுரவதம், சூரசம்காரம், வள்ளியம்மை திருக்கல்யாணம் என்ற தலைப்புக்களில் கந்தபுராணம் பற்றி விரிவுரையாற்றி அனைவரையும் முருகபக்தியில் திளைக்கச்செய்தார்கள்.

விழா நிறைவில் வந்திருந்தோரனைவருக்கும் பிரசாதங்கள் வழங்கப்பெற்றன.

## தருமையாதீனம்
## மதுரை, ஸ்ரீ குருஞானசம்பந்தர் திருமடத்தில்
## கந்தசஷ்டி விழா

திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனம் மதுரை, ஸ்ரீகுருஞானசம்பந்தர் திருமடத்தில் 4—11—75 முதல் கந்தசஷ்டி விழா விரிவுரை மிகச் சிறப்பாக நடைபெற்றது. நாள்தோறும் மாலை 6 மணி அளவில், செந்தமிழ் சிவநெறிச் செம்மல், பேராசிரியர், டாக்டர். திரு. அ. சங்கரநாராயணன் M. A., Phd., அவர்கள் "கந்தபுராண சுருக்கம்" பற்றிய விரிவுரை நிகழ்த்தினார்கள். 9—11—75 கந்தசஷ்டி நாளன்று, மதுரைப் பல்கலைக் கழக சைவ தத்துவத்துறைத் தனிப் பேராசிரியர், தருமையாதீனப்புலவர், சித்தாந்தக் கலைச் செல்வர், திரு. க. வச்சிரவேல் முதலியார் B. A., B. T., அவர்கள் "கந்தபுராணத்தில் சைவ தத்துவங்கள்" என்பதுபற்றி விரிவுரையாற்றினார்கள். வித்துவான், திரு. தா. குருசாமி தேசிகர் அவர்கள் வரவேற்புரை நன்றியுரை முதலியன கூறி விழாவை உடனிருந்து நிகழ்த்தினார்கள்.

### திருவருட்பயன் விரிவுரை :

தருமையாதீனம் மதுரை. ஸ்ரீ குருஞானசம்பந்தர் திருமடத்தில் ஞாயிற்றுக்கிழமைதோறும் மாலையில் 6 மணி அளவில் "திருவருட்பயன்" விரிவுரை வகுப்பு நடைபெற, தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் அருள்பாலித்துள்ளார்கள். அதன்படி 26—10—75 அன்று வகுப்பு மதுரைப் பல்கலைக் கழக சைவ தத்துவத்துறைப் பேராசிரியர், தருமையாதீனப் புலவர், சித்தாந்தக் கலைச்செல்வர், திரு. க. வச்சிரவேல் முதலியார் B. A., B. T., அவர்கள் "திருவருட்பயன்" தொடர் விரிவுரை வகுப்பைத் தொடங்கி நிகழ்த்தினார்கள். இவ்வகுப்பு, மதுரைவாழ்மக்கள் சமய நூல் பயிற்சி பெற சிறந்த வாய்ப்பாக அமைந்துள்ளது. இங்கு திருவாசகத் தொடர் விரிவுரை வகுப்பு நடைபெறுவதை அனைவரும் அறிவர். 3—11—75 அன்று ஸ்ரீ மெய்கண்டார் குருபூஜை விழாவும், விரிவுரையும் சிறப்பாக நடைபெற்றன. அன்பர்கள் பலர் பங்குபற்றிப் பயன்பெற்றனர். வித்துவான் திரு. தா. குருசாமி தேசிகர் அவர்கள் வகுப்புக்களை உடனிருந்து நிகழ்த்துவித்தார்கள்.

# எதிர்காலம்

ஜோதிஷம். திரு. A. இராசமாணிக்கம்
ஆசிரியர்,
ஸ்ரீ குமரகுருபர் சுவாமிகள் நடுநிலைப்பள்ளி, திருப்பனந்தாள்.

( இராட்சஸ௵ மார்கழிமீ 1௳ முதல் 30௳ முடிய )

(16—12—75 முதல் 14—1—1976 முடிய)

ஸ்ரீ இராட்சஸ௵ மார்கழிமீ 1௳ மங்களவாரம் கிருத்திகை நக்ஷத்திரம் ரிஷபராசியில் அன்று உதயம் முதல் 13 நாழிகை 31 விநாடிக்கு கும்ப லக்கினத்தில் ஸ்ரீ லோகரட்சகரான சூரிய பகவான் விருச்சிக ராசியிலிருந்து தனுர் ராசியில் தேவதின விடியற்காலமாக மார்கழிமாதப் பிரவேசம் செய்தருளுகிறார். சங்கிரம வார லக்கின, நக்ஷத்திர பலனால் உலகெங்கும் சிவந்த தானியப் பயிர் விருத்தியும், பசு முதலான கால்நடைகள் அபி விருத்தியும் ஆகும். மற்றைய கிரகஸ்திதியால் தனியா, எண்ணெய், ஜவுளி, வெங்காயம், பாக்கு, ரப்பர் முதலிய பொருள்களின் விலைவாசி மாதமுற்பகுதியில் உயர்ந்தும் பிற்பகுதியில் குறைந்தும் காணும். சகல தேசங்களிலும் உள்ள தொழில் கூடங்களில் பொருள்களின் உற்பத்தி அதிகரித்து பிரஜைகளின் தேவை பூர்த்தியாகும். தேசங்களில் எங்கும் மனுதர்ம ஆட்சி ஏற்பட்டு ஸ்திரீ இனங்கள், சாது ஜனங்கள், பிராம்மண பிரஜைகள் இரட்சிக்கப்படுவார்கள். மக்கள் வாழ்வில் சௌகரியமும் வாழ்க்கை வசதிகளும் பெற்று உய்வர். உலகெங்கும் உள்ள தெய்வீகப் பேரவைகளின் ஆஸ்திக விமர்சனம் நன்கு நடைபெறும். திரு மடங்கள், ஆசாரிய பீடங்களின் கர்த்தாக்களாகிய புண்ணிய சீலர்கள் நிகழ்த்தும் சிவசமய கைங்கரியங்கள், தேவாலய பூசைகள், விழாக்கள் சிறக்க, தேச சுபிட்சம் ஏற்படும். பிரஜைகள் அனைவரும் ஸ்ரீ தேவியின் கடாட்சம் பெற்று தொழில்கள் பல செய்து பொருள் ஈட்டி நேர்மையுடன் வாழ்க்கை நடத்துவார்கள்.

## 1. மேஷம் – அசுவதி – பரணி – கார்த்திகை ¼

( சு. சே. சோ. லா. – லி. லு. லே. லோ. – அ. )

மேஷராசி 9 பாதங்களும் எழுத்துக்களும் இம்மாதம் மிச்சிர பலனாக நடக்கும். குடும்பத்தில் போதிய தனவசதியும் சௌகரிய

மும் இருந்துவரும். மனோபலமான நிலைமையில் சில சிறப்பு சாதனைகளைச் செய்வதால் பிரசித்தம் ஏற்படும். இயந்திர சாதனங்களில் அபிவிருத்தி பலன் ஏற்படும். தாரபுத்திரர்கள் சௌக்கியமாக இருப்பார்கள். இம்மாதம் 12 ஆம் தேதிக்குமேல் வித்துவத்வம், தொழில்துறை, வியாபாராதிகளில் மேன்மையும், வழக்குவிவகாரத்தில் ஜெயபிராப்தியும் ஏற்படும். எல்லாக்காரியங்களும் மதிநுட்பமாகச் செயல்படும். வியாழன், வெள்ளிசுபமாகும்.

## 2. ரிஷபம் – கார்த்திகை ¾ – உரோகிணி – மிருகசீர்ஷம் ½

( இ. ஊ ஏ. – ஓ. வ. வி. வு. – வே. வோ. )

ரிஷபராசி 9 பாதங்களும் எழுத்துக்களும் இம்மாதம் சுபபலனைத்தரும். தனவசதி தாராளமாக இருந்துவரும். குடும்பத்தினர் சுக சௌகரியமாக இருந்துவருவார்கள். இருப்பிட சௌகரியம் நாகரிகம் பொருந்தி அமையும். புத்திரர்களின் கல்வி தொழில் துறைகள் மேன்மையுறும். பந்துமித்திரர்களால் கௌரவிக்கப்படுதலும், அரசாங்கத்தில் செல்வாக்கும் ஏற்படும். இளைஞர்களாக இருப்பவர்களுக்கு விவாக பிராப்தியையளிக்கும். செய்தொழில் அல்லது உத்தியோகம் புத்திசாதுரியமாக உயர்ந்த முறையில் செயல்படும். செவ்வாய், புதன் சுபமாகும்.

## 3. மிதுனம்–மிருகசீர்ஷம் ½ – திருவாதிரை–புனர்பூசம் ¾

( கா. கி. – கு. க. ங. ச்சா. – கே. கோ. ஹ )

மிதுனராசி 9 பாதங்களும் எழுத்துக்களும் இம்மாதம் மிச்சிர பலனை நடக்கும், தனம் கௌரவமுடன் வரவும் சமச்செலவுமாக இருக்கும். குடும்ப விஷயத்தில் மனதளவில் கஷ்டம் ஒருபுறம் இருப்பினும் அவ்வப்போது இதர அனுகூலங்களினால் ஆறுதல் ஏற்படச்செய்யும். சகோதரர் பந்து அம்மான்கள் விசுவாசமுடனும் உதவியாகவும் இருப்பார்கள். இம்மாதம் பிற்பகுதியில் தாம்பத்திய வாழ்க்கையில் மனஸ்தாபமும் சரீரத்தில் உஷ்ணாதிக்க நலிவும் காட்டி நீக்கும். சூரிய கிரக பிரீதி செய்ய நலம் தரும். செய்தொழில் அல்லது உத்தியோகம் கஷ்டமாக நடைபெறும். வியாழன், வெள்ளி சுபமாகும்.

## 4. கடகம் – புனர்பூசம் ¼ – பூசம் – ஆயில்யம்

( ஹி. – ஹு. ஹே. ஹோ. ட. – டி. டு. டே. டோ. )

கடகராசி 9 பாதங்களும் எழுத்துக்களும் இம்மாதம் சுபமான பலனைத்தரும். தனவிருத்தியை ஏற்படுத்திக்கொண்டிருக்கும்.

பூமி இயந்திர வகையில் அபிவிருத்தி நிலைமையாக இருந்துவரும். புத்திரர் பௌத்திரர்கள் க்ஷேமமாக இருப்பார்கள். அரசாங்க பிரபலமும் புத்தி சாதுரிய வல்லமையும் அளித்துவரும். விவகாரங்களில் ஜெயபிராப்தியாகும். தாம்பத்திய வாழ்க்கையில் அன்யோன்ய நிலைமையாக இருந்துவரும். புண்ணிய க்ஷேத்திராடனமும் தெய்வ தரிசனங்களும் கிடைக்கும். எல்லாக்காரியங்களும் புனிதமானதாக நடைபெற்றுவரும். ஞாயிறு, திங்கள் சுபமாகும்.

## 5. சிம்மம் – மகம் – பூரம் – உத்திரம் ¼

( ம. மி. மு. மெ. – மோ. டா. டி. டு. – டே. )

சிம்மராசி 9 பாதங்களும் எழுத்துக்களும் இம்மாதம் மிச்சிர பலனாக நடக்கும். தனவிருத்தி குடும்ப சௌக்கியம் இவற்றில் இம்மாதம் முற்பகுதியில் சுமாராகவும், பிற்பகுதியில் சௌபாக்கியமாகவும் இருக்கும். சகோதரர்களிடையே மனக்குறையும் சுமுகமும கலந்து காணும், பசு பால் கறவை பெருகும். சிரம் வயிறு இவற்றில் நலிவும் உடன் வைத்தியத்தால் குணமும் ஆகும். வழக்கு விவகாரங்களில் இம்மாதம் பிற்பகுதியில் ஜெயானுகூலத்தை ஏற்படுத்தும். தாமபத்திய வாழ்வில் சௌக்கியம் மேலிடும். செய்தொழில் அல்லது உத்தியோகம் ஒழுங்குபட்டு முறையுடன் நடைபெறும், செவ்வாய் புதன் சுபமாகும்.

## 6. கன்னி – உத்திரம் ¾ – ஹஸ்தம் – சித்திரை ½

( டோ. ப. பி. – பு ஷ. ண. ட. – பே. போ. )

கன்னியாராசி 9 பாதங்களும் எழுத்துக்களும் இம்மாதம் சுபபலனாக நடக்கும். தனவசதி தாராளமாக இருந்து வரும், குடும்பத்தில் நிம்மதி ஏற்படும். பசு பால் கறவை வாகன சௌகரியம் உண்டாகும். புத்திரர்களின் கல்வி தொழில் துறைகளில் அரசாங்கத்தில் நன்மையை ஏற்படுத்தும். ரோகம் நிவர்த்தியாகி சௌக்கியம் ஏற்படும். தாம்பத்திய வாழ்க்கையில் பரஸ்பரம் நிலவும். பிதாவுக்கு ஓர் கண்ட சம்பவம் ஏற்பட்டு நீங்கும். செய் தொழில் அல்லது உத்தியோகம் புத்தி சாதுர்யத்துடனும் சிறப்புடனும் நடைபெறும். வியாழன் வெள்ளி சுபமாகும்.

## 7. துலாம் – சித்திரை ½ – சுவாதி – விசாகம் ¾

( ர. ரி. – ரு. ரே. ரோ. தா. – தி. து. தே. )

துலாராசி 9 பாதங்களும் எழுத்துக்களும் இம்மாதம் மிச்சிர பலனாக நடக்கும். தனவசதி தாராளமாக இருந்துவரும்.

சகோதரர்களுக்கு மேன்மை ஸ்திதி ஏற்படும். பந்துமித்திரர்களின் வருகையும், சந்துஷ்டியும், சுகசௌகரியம் மேலிடுவதும் ஆகும் புத்திரர்களின் தொழில் துறையில் இம்மாத முற்பகுதி மந்த நிலைமையாகவும் பிற்பகுதியில் விருத்திகரமாகவும் இருந்து வரும். சிலரிடம் மனஸ்தாப சம்பவங்களும் பயணத்தில் ஓர் விபத்தும் ஏற்படச்செய்யும். ஸ்ரீசுப்பிரமணிய சுவாமிக்கு அருச்சனை செய்ய நலம் தரும். எல்லாக் காரியங்களும் சமயோஜித புத்தியால் வெற்றிகரமாக நடைபெறும். சனி ஞாயிறு சுபமாகும்.

## 8. விருச்சிகம் - விசாகம் ¼ - அனுஷம் - கேட்டை.

( தோ. - ந. நி. நு நெ. - நோ. ய. யி. யு. )

விருச்சிகராசி 9 பாதங்களும் எழுத்துக்களும் இம்மாதம் மிச்சிர பலனை நடக்கும். அதிகமாக தனச்செலவை ஏற்படுத்தும். கண்ணில் ரோகம் வந்து குணமாகும். பந்துமித்திரர்களில் ஓர் மனஸ்தாபம் வந்து நீங்கும் இயந்திரவாகன சாதனங்களில் சுமாரான பலனை இருந்துவரும் புத்திரர் புத்திரிகளின் சௌக்கியம்மேலிடும். வழக்கு விவகாரத்தில் கடும் போக்கா யினும் சாதக நிலைமையை உருவாக்கும். மனைவியுடன் மனஸ்தாபமும் உடன் பரஸ்பரமம் ஏற்படுவதாகும். ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமிக்கு அருச்சனை செய்ய நலம்தரும். செய்தொழில் அல்லது உத்தியோகத்தில் ஓர் மாறுதல் ஏற்படும்

## 9. தனுசு - மூலம் - பூராடம் - உத்திராடம் ¼

( யே. யோ. பா. பி. - பு. த. ப. ட. - பே. )

தனுர்ராசி 9 பாதங்களும் எழுத்துக்களும் இம்மாதம் மிச்சிர பலனை நடக்கும். தனவசதியும் சுகசௌகரியமும் இருந்துவரும். சகோதரரின் கல்வி தொழில் துறையில் நற்பலனை இருந்துவரும். புத்திரர்கள் சம்பந்தமாக செலவுகள் ஏற்படினும் நலமுடன் இருந்து வருவார்கள். செவ்வாய் சுக்கிர பரிவர்த்தனையானது ஸ்திரிவழியிலான பொருள் விஷயமாக ஓர் சர்ச்சை ஏற்பட்டு மனத்தாங்கலில் முடியும். மனைவிக்கு இரத்த பித்த மயக்கம் கண்டு நீங்கும். செய்தொழில் அல்லது உத்தியோகத்தில் மந்த நிலைமையாக இருந்து வரும். சகல காரியங்களிலும் கால தாமதமாக பலன் கிட்டும். செவ்வாய் புதன் சுபமாகும்.

## 10. மகரம் - உத்திராடம் ¾ - திருவோணம் - அவிட்டம் ½

( போ. ஜ. ஜி. - கி. கு. கே. கோ. - க. கி. )

மகரராசி 9 பாதங்களும் எழுத்துக்களும் இம்மாதம் சுமாரான பலனை நடந்துவரும். தனம் வரவும் செலவும் சரிசமமாக

இருக்கும். சகோதரர்களின் போக்கு குணம் இவற்றில் அதிருப்தி ஏற்படும். பந்துமித்திரர்களால் செலவு ஏற்படச்செய்யும். பெற்ருேர்க்கு உடல்நல பாதிப்பு ஏற்பட்டு உடன் வைத்தியத்தால் குணமாகும். தாரபுத்திரர்களிடையே மனவெறுப்பு உடன் அனுசரணைபோக்குமாக இருந்துவரும். வீடு, மனை வாங்கும் விஷயத்தில் சல்லியம் உள்ளமனை அல்லது தகாத இடம் என்கிற காரணத்தால் தயக்கமாகும். செய்தொழில் அல்லது உத்தியோகம் புகழுடன் நடந்துவரும். வியாழன் வெள்ளி சுபமாகும்.

### 11. கும்பம் – அவிட்டம் $\frac{1}{2}$ – சதயம் – பூரட்டாதி $\frac{3}{4}$

( கு. கே. – கோ. ஸ. ஸி. ஸு. – ஸே. ஸோ. தா. )

கும்பராசி 9 பாதங்களும் எழுத்துக்களும் இம்மாதம் சுபபலனைத்தரும். எதிர்பாராத தனலாபங்களை ஏற்படுத்தும்-குடும்ப நலம் பெருகும். சகோதரர்கள் விசுவாசமுடனும் உதவிகரமாகவும் இருப்பார்கள். பூமி இயந்திர சாதனங்களில் நற்பலன் கிட்டும். புத்திரர் புத்திரிகளின்சுகம் கணவன் மனைவியின் விசுவாசம் மேலோங்கும். ஸ்திரசொத்துக்களின் பிராப்தி ஏற்படும். எல்லாக்காரியங்களும் வெற்றிகரமாகச் செயல்படும். செய்தொழில் அல்லது உத்தியோகம் பெருமதிப்புடன் விளங்கும். திங்கள் செவ்வாய் சுபமாகும்.

### 12. மீனம் – பூரட்டாதி $\frac{1}{4}$ – உத்திரட்டாதி – ரேவதி

( தி. – து. ஸ. ச. த. – தே. தோ. ச. சி. )

மீனராசி 9 பாதங்களும் எழுத்துக்களும் இம்மாதம் சுபபலனைத்தரும். குடும்பத்தில் தனவசதி பெருகும் வித்தியா வியாபாராதிகளில் நற்புகழையும் ஆதாயத்தையும் கொடுக்கும். சகோதரர்கள் மேன்மைஸ்திதியில் உதவிகரமாக இருந்து வருவார்கள். மனோதிடத்தால் சகல காரியங்களும் நடந்துவரும். வீடு மனைசம்பந்தமாக மனைவி புத்திரர்களிடையே மனக்குறைகள் வந்து உடன் சகசன்யம் ஏற்படும். செய்தொழில் அல்லது உத்தியோகம் நடுவு நிலைமையுடன் நடைபெற்றுவரும். மனிதாபிமான பொதுநலப்பணிகளில் நற்கியாதி உண்டாகும். புதன், வியாழன் சுபமாகும்.

# "ஞானசம்பந்தம்"

## முப்பத்துநான்காம் ஆண்டு மலர்ப்

## பொருளடக்கம்

## பார்வையாளர் குறிப்பு

தருமையாதீனம்

### ஸ்ரீ கம்பகரேசுவரசுவாமி தேவஸ்தானம், திருபுவனம்.

திருபுவனம் திருக்கோயிலின் அமைப்பு உள்ளத்தைப் பெரிய தாக்குகின்றதை உணர்ந்தேன். விசால மனப்பான்மைதான் என் இருதயத்தில் முதலில் தோன்றியது. அதன்பின்னர் மூர்த் தங்களைத் தரிசித்ததில் பேரானந்தம் அடைந்தேன். தஞ்சை மாநகரில் பிறந்த எனக்கு இந்தத் திருக்கோயில் மற்றொரு பிறப் பிடமாக கற்பனைக்கு எட்டி உள்ளத்தையும் உடலையும் புளகாங் கிதம் செய்வித்தது. ஆலய நிர்வாகிகளுக்கு எனது நன்றி கலந்த வணக்கங்கள்.

(Sd) V. Balasubramanyam,
Judge, High Court, Madras.

23—11—1975.